இராமநாதபுரம் மாவட்டத்தில் கல்கி — II

# கல்கி

KALKI
26.4.87
ரூ. 1.50



## வறட்சியைப் போக்க வழிகளா இல்லை?



## குப்பைக்குப் போன முத்தான திட்டம்

# நல்ல வளர்ச்சி போர்ன்விடா பயிற்சி!

அன்னையர், அறிவர்: காட்பரிஸ் போர்ன்விடா கோகோ, மால்ட், பால் மற்றும் அசல் சீனியின் ஊட்ட நலன்களைக் கொண்டது. போர்ன்விடா குழந்தைகள் மிக விரும்பும் அத் தனிச் சுவையை பாலின் குணத்துடன் அளிக்கிறது.

தினமும் போர்ன்விடா அளிக்கப்படும் குழந்தைகள் வேலையிலும் விளையாட்டிலும் கூர்மையோடிருக்கிறார்கள். அது, அவர்களுக்கு ஆரோக்கியத்தையும் சுறுசுறுப்பையும் அளிக்கிறது. அவர்களுடைய வளர்ச்சிக்கு எல்லா வகையிலும் நலன் அளிக்கிறது.

அதன் தனிச் சுவையுடன் இணைந்திட்ட இன்றைய வளர்ச்சி.

காட்பரிஸ்
போர்ன்விடா






# புலி வேட்டை!



மதுராந்தகம் அருகே சில கிராமங்களில் புலி ஒன்று ஒன்பது பேரைத் தாக்கியது என்று கேள்விப்பட்ட நமது முதல்வர், ''அதை முடிந்தால், உயிருடன் பிடிக்கவும். அல்லது சுட்டு விடவும்'' என்று உத்தரவு பிறப்பித்தார். அரசின் புலி வேட்டை எப்படியிருக்கிறது என்று பார்க்க நாங்களும் கிளம்பினோம்......

சூரியன் தலைக்கு நேர் மேலே அனலைக் கக்கிக் கொண்டிருந்தான்.

மதுராந்தகம்—பவுன்சூர்—கடலூர் சாலையில் இருக்கிறது பாலூர் கிராமம்.

மெயின் ரோட்டிலிருந்து இரண்டு பர்லாங் உள்ளே போக வேண்டும்.

அந்தக் கிராமத்தை நோக்கி நடந்தோம். கடுகப்பட்டுக் கிராமத்து இளைஞர் கிருஷ்ண மூர்த்தியும் எங்களோடு சேர்ந்து கொண்டார்.

''ஸார்! இதோ, இங்கதான் புலி இருக்கிறது!'' என்று அவர் கூறி ஓரிடத்தில் நின்றதும் எங்கள் இருதயங்கள் ரேஸ் விட, திரும்பிப் பார்த்தோம். அடர்த்தியான கரும்புத் தோட்டம். உள்ளே ஆள் புகுந்தால் இருப்பது தெரியாது!

''ஆமாம் ஸார். போலீஸ்காரங்களும் வன இலாகா அதிகாரிகளும் தேடறதைக் கைவிட்டு விட்டுப் போயிட்டாங்க. ஆனால் நேத்துக் கூட இந்தப் பக்கம் ஆலமரத்தின்



* உயிர் தப்பிய சிறுமி ஜெகதா

அடியில் இருக்கிற குளத்தில் புலி தண்ணீர் குடிச்சதைப் பார்த்தவங்க இருக்காங்க'' என்று கூறிய கிருஷ்ணமூர்த்தியிடம் இந்தப் புலியின் நடமாட்டத்தைப் பற்றி முதலிலிருந்து சொல்லுமாறு கேட்டோம்.

வெள்ளிக்கிழமை, ஏப்ரல் பத்தாம் தேதி. கணபதி நாயக்கர் தமது அவரைத் தோட்டத்தில் காய் பறிக்கச் சென்றபோது புலியைப் பார்த்திருக்கிறார். உடம்பில் வரிவரியாக கறுப்புக் கோடு. மஞ்சள்—கோதுமை நிறம்! பயத்தில் துணியால் வாயை மூடிக் கொண்டு வெளியில் ஓடி வந்து, பிறகு, ''புலி! புலி!'' என்று கத்தியிருக்கிறார். ஆனால் யாரும் நம்பவில்லை! ''அட, நம்ப கிராமத்துப் பக்கம் எங்கேயும் காடு கிடையாது. புலி எப்படி வந்துடும்?'' என்றார்கள். கணபதி மீண்டும் 'புலிதான்' என்று அடித்துக் கூறவே ஒரு கூட்டம் கிளம்பியிருக்கிறது. காசி நாயக்கர், மணிவண்ணன், முனுசாமி, ஏகாம்பரம் ஆகியோர் கையில் அகப்பட்டதை எடுத்துக் கொண்டு புலியைத் தாக்கச் சென்றனர். முதலில் புலியிடம் அடி வாங்கியவர் காசி நாயக்கர்தான். இரு கண்களுக்கும் மேலாக முன்னங்காலால் ஒரு போடு போட்டதாம்!

''அடித்தவுடன் வெளிவந்த ரத்தத்தை நக்கிச்சுங்க!'' என்று கூறிய காசிநாயக்கர் கண்களில் இன்னமும் பயத்தின் சாயல் தெரிந்தது! பிறகு மணிவண்ணன், முனுசாமி, ஏகாம்பரம், ராகவலு ஆகியோரை இந்த வரிசையில் புலி தாக்கியது. மிகவும் மோசமாகப்பாதிக்கப்பட்டதுசிறுமிஜெகதாதான். கூட்டத்தோடு கூட்டமாக நின்றவள், புலி பாய்ந்து வரும்போது ஓட முயன்று, கல் தடுக்கி விழுந்து விடவே, புலி, ஜெகதாவின் முதுகைப் பதம் பார்த்துவிட்டது. எலும்பு தெரியும் அளவுக்குத் தாக்கிவிட்டது. மதுராந்தகம் டாக்டர்கள் கைவிட, தற்போது

பாலூரிலிருந்து எட்டு கி. மீ. தூரத்தி லுள்ளது நெற்குணப்பட்டு கிராமம்.



* வெங்கடாசல ரெட்டியார்

ஜெகதா செங்கற்பட்டு மருத்துவக் கல்லூரி ஆஸ்பத்திரியில் இருக்கிறாள்.

இதற்குள் கிராம அதிகாரி மூலம் போலீசுக்குச் செய்திபோக, முப்பத்தைந்து போலீஸ்காரர்கள் கிராமத்திற்கு வந்துவிட்டார்கள்! புலியைப் பிடிக்க வந்தவர்கள், நடந்து கொண்ட விதத்தைப் பிட்டு வைத்தார் காசி நாயக்கர்.

"பள்ளிக்கூடத்திலே வந்து தங்கினாங்க. புலி பதுங்கி இருக்கிற இடத்தைச் சொல்லியும் கூட அங்கே போகலீங்க! எங்ககிட்



* காசி நாயக்கர், மணிவண்ணன், முனுசாமி.

டேயே முப்பது டார்ச் லைட்டு கேட்டாங்க! பாட்டரி போடச் சொன்னாங்க! சாப்பாடு வடிச்சுப் போட்டோமுங்க! அவுங்க வந்திருந்த பஸ் மேலேயே உட்கார்ந்து கொண்டு பெட்ரோமாக்ஸ் லைட்ல சீட்டு விளையாடினாங்க! அரசாங்கம் தடை செய்திருக்கும் விஷயங்களைக் கூடக் கேட்டாங்க! எங்க பஞ்சாயத்துத் தலைவருக்கு இரண்டாயிரம் ரூபாய் வரை செலவாகி இருக்கும். மறுநாள், சனிக்கிழமை பகல் பன்னிரண்டு மணி வரை இப்படியே நேரம் போயிடுச்சுங்க."

அந்தச் சமயம் பாலூரிலிருந்து தாமு என்பவர் வந்து, புலி அவர்களுடைய கிராமத்துக்கு வந்திருப்பதாகக் கூற, உடனே போலீஸ் முகாமை இடம் மாற்றியது!

நெற்குணப்பட்டை விட்டுப் புறப்பட்ட புலி, இரவோடு இரவாக எட்டு கி.மீ. பயணப்பட்டுப் பாலூர் ஊராட்சித் தலைவர் வெங்கடராஜ் ரெட்டியாரின் ரைஸ் மில்லின் பின்புறம் உள்ள வாழைத் தோப்பில் பதுங்கிக் கொண்டது. காலையில் வழக்கம் போல விறகு பொறுக்கச் சென்ற ஏழுமலை, ஏதோ வித்தியாசமான சத்தம் கேட்டுச் சுற்றும் முற்றும் பார்ப்பதற்குள்.

* கிருஷ்ணமூர்த்தி



* முனுசாமி (பாலூர்)





* செங்கல்பட்டு சப் கலெக்டர்: வரப்பிரசாதராவ்.

ஒரே பாய்ச்சல்!

இரண்டு கால்களாலும் புலி அடிக்கவே மிரண்டு போனார் ஏழுமலை.

ஒரே ஓட்டம்! மேட்டில் ஏறித் திரும்பிப் பார்த்தால், புலி, சாலையைக் கடந்து கரும்புத் தோட்டத்துக்குள் புகுந்து கொண்டிருந்தது!

இதற்குள் வன இலாகா அதிகாரிகளும் பெரிய போலீஸ் அதிகாரிகளும் பாலூருக்கு வந்து விட்டார்கள்.

"போலீஸ்காரங்க வந்தாங்களே தவிர யாரும் கரும்புத் தோட்டத்தில் நுழைஞ்சு பார்க்கலீங்க! எங்க கிராமத்து ஆட்களையே தேடிப் பார்க்கச் சொல்லிட்டுச் சுற்றி நின்னுக்கிட்டாங்க! நாங்க தாரை, தப்பட்டை எல்லாம் அடிச்சிக்கிட்டுப் பத்துப் பத்துப் பேராக உள்ளே போனோம். ஆனால் புலி வெளியே வரவில்லை. தோட்டத்தினுள் சென்று கொண்டிருந்த பாலூர் முனுசாமி, பதுங்கியிருந்த புலியின் மேல் காலை வைத்து விட்டார். அவர், "புலி, புலி!" என்று கத்தியதைக் கூடக் கண்டு கொள்ளாமல் போலீஸ்காரர்கள் தூரத்தே தள்ளி நின்று கொண்டார்கள். முனுசாமி புலியை அடிக்கக் கையில் இருந்த தடியை வீசவே, அந்தப் புலி, தடியை ஒரு தட்டுத் தட்டி விட்டுப் பாய்ந்து ஒற்றைக் காலால் ஒரு போடு போட்டது. முனுசாமி கையிலிருந்து ரத்தம் பீறிட்டது. இந்தப் போலீஸ்காரங்க அடிபட்ட ஆளை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகக் கூடக் கார் கொடுக்கலீங்க. ரொம்ப அநியாயமுங்க" என்று நொந்து கொண்டார், கிருஷ்ணமூர்த்தி.

ஊராட்சித் தலைவர் வெங்கடராஜ் ரெட்டியாரைச் சந்தித்த போது:

"நான் சனிக்கிழமை ஊரிலே இல்லேங்கறதுக்காகக் கரும்புத் தோட்டத்தை எரிக்காம இருந்திருக்காங்க. இத்தனை பேரைப் புலி அடிச்சிருக்கு. கரும்புத் தோட்டத்தை எரிச்சுப் புலியைப் புடிச்சிருக்கலாம். ஒரு சரியான முடிவை எடுக்காமல் விட்டிருக்காங்க. இப்போ நாங்க பயந்துக்கிட்டே இருக்கோம். திருப்போரூர் காட்டுக்குப் போயிட்டதாச் சொல்லிக்கிறாங்க. அது அவ்வளவு சுலபமில்லீங்க. முப்பது கிராமங்களைக் கடந்து போகணும். இடையில்

காடோ புதரோ அவ்வளவாகக் கிடையாது. அதனால் அந்தப் புலி இன்னும் எங்க கரும்புத்தோட்டத்திலேதான் இருக்கணும். இன்று (தமிழ் வருடப்பிறப்பு) நல்ல நாளாக இருப்பதால் நாளை தோட்டத்தை எரிப்பதாக இருக்கிறேன். எங்க ஊருக்கு வர்ற பாதையிலே போலீஸ் பந்தோபஸ்து கூடப் போடலை. மக்கள் பயந்துக்கிட்டுத்தான் போய் வர்றாங்க.''

பலத்த அடிபட்டு மதுராந்தகம் ஆஸ்பத்திரியில் இருக்கும் முனுசாமியையும், ஏகாம்பரத்தையும் பார்த்தோம். அடி வாங்கிய இருவரையும், ''உங்களை அடித்தது சிறுத்தையா, புலியா?'' என்று கேட்டபோது, ''புலிதாங்க! நிச்சயமாத் தெரியும்!'' என்று அடித்துச் சொன்னார்கள். ''எங்களை விட்டுத் தேடிப் பார்க்கச் சொல்லி விட்டுப் போலீஸ்காரங்க ஒதுங்கிக்கிட்டாங்க. துப்பாக்கி வைத்திருந்து என்னங்க பிரயோஜனம்?'' என்று குறைபட்டுக்கொண்டார் முனுசாமி.

செங்கல்பட்டுக்கு வந்து சிறுமி ஜெகதாவைப் பார்த்தோம். முதுகில் பலத்த அடி. ''இந்திராகாந்தி அம்மாகூட உத்தரவு கொடுத்திட்டாங்க; ஆனா போலீஸ்காரங்க கூடலைங்க,'' என்று எங்களிடம் சொன்னார் ஜெகதாவின் அம்மா. இவரைப் போன்ற பெண்மணிகளின் அறியாமைதானே நமது கவர்ச்சி அரசியல்வாதிகளின் பலம்!

கடைசியாக, செங்கல்பட்டு சப் – கலெக்டர் வரப்பிரசாதராவைச் சந்தித்தோம். இளைஞர். நெற்குணப்பட்டிலும், பாலூரிலும் போலீஸார் நடந்து கொண்ட விதத்தைப் பற்றியும், பாலூரில் மக்கள் பயந்து கொண்டு இருப்பதையும் தெரிவித்தவுடன், ''பாலூரில் காவல் போடச் சொன்னேனே? போலீஸ்காரர்கள் இல்லையா?'' என்று கேட்டுவிட்டு உடனே மதுராந்தகம் தாசில்தாரைத் தொடர்பு கொள்ள முயன்றார். ''போலீஸ்காரர்கள் நடத்தை நீங்கள் கூறியபடியே இருந்திருந்தால் அதைவிடக் கேவலமான விஷயம் வேறொன்றுமில்லை. இதைப் பற்றி விசாரிக்கப் போகிறேன். சனிக்கிழமை இரவு முழுவதும் நானே பாலூரில் தங்கியிருந்தேன். புலியின் தற்போதைய நடமாட்டத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை. நான் நாளைக் காலையே (15.4.87) மீண்டும் பாலூருக்குச் செல்கிறேன். மக்கள் பயத்தைப் போக்குவது அரசின் கடமை'' என்று முடித்தார்.

சுமார் நாற்பது கிராமங்களில் இப்போது புலிப்பயம் பற்றிக் கொண்டிருக்கிறது. புலியைக் கொல்லாமல், துப்பாக்கிக் குண்டுக்குப் பதிலாக மயக்க மருந்து அடங்கிய ஊசியை உடலில் பாய்ச்சி, புலியைப் பிடிக்க விஞ்ஞானம் வழிகாட்டவும் செய்கிறது. ஆனால் நமது போலீஸுக்குத் தெரிந்ததெல்லாம் அஞ்ஞானம்தான் போலும்!

— கௌசல்யா

படங்கள்: கே. வி. ஆனந்த்

# குப்பைக்குப் போன முத்தான திட்டம்!



* முத்து வளரும் தகுதியுள்ள சிப்பிகள்......

நீலக் கடல், அலைகளேயில்லாமல் அமைதியாய் உறங்கிக் கொண்டிருக்கும் அழகிய மண்டபம் கடற்கரை. முத்தான திட்டங்கள் கூட முடங்கிப் போகின்றன என்பதற்கு அங்கே கண்ணெதிரே ஒரு சாட்சி: வெறும் கட்டடமாய் நிற்கும் தமிழ்நாடு முத்து நிறுவனம்!

முதலில் முத்து எப்படி உருவாகிறது என்று பார்ப்போம். சிப்பி கடலுக்குள் வாய் திறந்திருக்கும்போது, ஏதாவது ஓர் அழுக்கு— சிறு மணலோ, அல்லது பாசித் துகளோ அந்த வாய்க்குள் போய்விட்டால், சிப்பி எரிச்சலடைகிறது. காயம் பட்ட இடத்தில் நமக்குச் சீழ் வடிதல்போல், அந்த அன்னியப் பொருளை டிஸ்மிஸ் செய்யும் அவசரத்துடன் அதைச் சுற்றி சிப்பி ஒரு திரவத்தைச் சுரக்க ஆரம்பிக்கிறது. சிறையில் அகப்பட்ட அந்தத் துகளின் உருவத்தை ஒட்டியே இயற்கை முத்து வளர்கிறது. இந்த அழுக்கைச் சிப்பிக்குள் நாமே திணித்துவிட்டு, அதில் முத்து வளரும்வரை காத்திருந்து எடுப்பதுதான் செயற்கை முத்து!

இது மாதிரியான செயற்கை முத்துக்களை ஜப்பானியர் 1907—ஆம் ஆண்டிலிருந்தே உருவாக்க ஆரம்பித்துவிட்டார்கள். இப்போது அவர்களின் செயற்கை முத்துக்களின் ஏற்றுமதி ஆண்டொன்றுக்கு நாற்பத்தைந்து டன். அந்த அளவுக்கு வளர்ச்சி பெற்றுவிட்டார்கள். இது மட்டுமல்ல, சிப்பிக்குள் வைக்கப்படும் வேறு பொருள் அல்லது திக எந்த வடிவத்தில் வைக்கப்படுகிறதோ அதே வடிவத்தில்தான் முத்தும் இருக்கும் என்பதால் முத்துக்களைப் பல்வேறு வடிவங்களில் உற்பத்தி செய்து, உலக மார்க்கெட்டின் முன்னணியில் இருக்கிறார்கள் ஜப்பானியர்கள். காரணம், இயற்கை முத்துக்கள், செயற்கை முத்துக்களைப் போல ஒழுங்கான வடிவங்களில் இருக்காது! இவற்றோடு இயற்கையான முத்துக் குளிப்பில், ஆயிரம் சிப்பிகளுக்கு ஒரு முத்துத்தான் கிடைக்கும். ஆனால் செயற்கை முத்து விஷயத்தில் ஆயிரம் சிப்பிகளிலும் முத்துக்கள் இருக்கும் என்பதால் இதில் லாபமும் எக்கச்சக்கம்!

இதைக் கண்ட டாக்டர் கே. அழகர்சாமி இந்தச் செயற்கை முத்து விவகாரத்தை இந்தியாவில் ஆராய்ந்தார். வெற்றி பெற்றார். அந்தப் பரிசோதனையின் பிள்ளைதான் தமிழ்நாடு முத்து நிறுவனம். இந்தச் செயற்கை முத்துக்களை உருவாக்கும் நிர்ப்பந்தத்திற்கு வேறொரு காரணமும் இருக்கிறது. மீன் பிடி தொழில் இயந்திரமயமாக்கப்பட்ட பிறகு, அந்த மீன் வலைகளின் வீச்சில் சிப்பிகள் இடம் பெயர்ந்து உயிரிழந்து போயின. ஆமாம், சிப்பிகள் பாறைகள் போன்ற ஏதாவதொன்றின் மேல் இருந்தால்தான் உயிர்



* முத்துக்கருப்பன்



* துரை ராமசாமி



* மண்டபத்திலுள்ள முத்து நிறுவனம்



குருசடைத்தீவு: கடலோரத்தில்—கடலுக்குள் தொங்க விடப்பட்டுள்ள செயற்கை முத்துச் சிப்பிகள்...

வாழுமே தவிர, மணலில் விழுந்தால் உடனே இறந்து விடும். இப்படிப் பலவும் இறந்து போனதால் முத்துக் குளிக்கும் தொழிலே நசிந்து போனது. இயற்கையான முத்துக் குளிப்பு கடைசியில் நடந்தது கடந்த 61—ஆம் ஆண்டு. அதன்பிறகு, அதற்கு அனைவரும் மூடு விழாச் செய்துவிட்டார்கள். இதுதான் செயற்கை முத்துக்களுக்கான ஆராய்ச்சி களின் உந்துதலுக்குக் காரணம். முன்பு கட லுக்குள்ளிருந்து சிப்பிகளைப் பொறுக்கிக் கொண்டு வந்து, செயற்கை முத்துக்களை உற் பத்தி செய்தது போக, இப்போது சிப்பிகளை யும் செயற்கையாகவே வளர்க்கும் அளவுக்கு அதில் முன்னேற்றம் அடைந்திருக்கிறார்கள்.

இந்தியாவிலேயே அதிகமான சிப்பிகள் கிடைப்பது இரண்டு இடங்களில்தான். ஒன்று குஜராத்தில் இருக்கும் கச். மற் றொன்று தமிழ்நாட்டில் இருக்கும் தூத்துக் குடி. இவற்றுள் தூத்துக்குடி சிப்பிகள்தான் தரத்தில் சிறந்தவை. அதற்கு **Pinctada Fucata** என்று பெயர்.

டாக்டர் அழகர்சாமியின் முயற்சியில் செயற்கை முத்துக்களை உற்பத்தி செய்யக் கடந்த 83—ல் 'ஸ்பிக்' நிறுவனமும், தமிழக அரசும் 'நான் பாதி, நீ பாதி' என்று ஆளுக்கு ஐம்பது சதம் முதலீடு செய்து தமிழ்நாடு முத்து நிறுவனத்தை ஆரம்பித்தன. நான்கு வருடங்களில் அந்த நிறுவனத்தின் மழலை அனுபவங்கள் என்ன? இங்கு முத்துக்களை எப்படி உருவாக்கிறார்கள்? இன்றைக்கு அதன் ஆரோக்கியம் எப்படி?'

கடைசிக் கேள்விக்கு உடனே முகத்தில் அடிப்பது போல் பதில் வருகிறது: "ஆரோக் கியமா? இந்த நிறுவனம் இப்போது உயி ரோடு சவப் பெட்டியில் ஏற்றப்பட்டு வரு கிறதாக்கும்!"

"ஐயையோ, ஏன்?"

"உங்களுக்கு ஆரம்பத்திலிருந்து சொல்ல வேண்டும்."

"சொல்லுங்கள்."

"தூத்துக்குடியில்தான் ஏராளமாக சிப்பிகள் கிடைக்கின்றன. இருந்தாலும் மண்டபத்தில் இந்தநிறுவனத்தை ஆரம்பித்த காரணமே, மண்டபம் கடற்கரையிலிருந்து ஒன்பது கி.மீ. தூரத்தில் கடலுக்குள் இருக்கும் குருசடைத் தீவுதான். தெற்கில் மன்னார் வளை வும், வடக்கில் பால்க் ஜலசந்தியும் இருப்ப தால் பருவக் காற்றுகளால் ஆபத்தில்லாமல் இந்தத் தீவு பொத்திப் பாதுகாக்கப்படு கிறது. நீர்ச் சுழிப்போடு சிப்பிகள் அடித்துப் போகும் அபாயமும் குறைகிறது. 83—ல் ஆரம்பித்தபோது உடனே சிப்பிகளைக் கொடுத்து உதவத் தமிழ்நாடு மீன் வள நிறு வனம் முன் வந்தது."

"சிப்பிகளை என்ன செய்வீர்கள்?"

"சிப்பிகளை முதலில் ரகவாரியாகப் பிரித் துக் கொள்வோம். சாதாரணமாக மூன்று வயதான சிப்பிகள் ஆரோக்கியமாய் இருக் கும். அவற்றைக் கடல் நீர் நிரப்பப்பட்ட பெரிய தொட்டிகளில் விட்டு மென்த்தால் என்ற மயக்க மருந்தைத் தூவுவோம். காரணம், சிப்பிகள் எப்போதும் மூடியே இருக்கும். அதுவாகத் திறந்தால்தான் உண்டு. நாமாகத் திறந்தால் உடைந்து விடும். அதற் காகத்தான் மயக்க மருந்து! அந்தப் போதை யில் சிப்பிகள் மெதுவாக வாயைப் பிளந்து கொள்ளும். திறந்த வாய் மூடிவிடாமல் உடனே சிறு குச்சியை தடையாகப் பொருத்தி விடத் திறமையான பெண்கள் இருக்கிறார்கள். செயற்கை முத்துக்களுக் கான கருப் பொருள்களுக்காக ஒரு பெரிய



நன்கு வளர்ந்த ஒரு செயற்கை முத்துச் சிப்பியைத் திறந்தபோது.... உள்ளிருக்கும் சதையும் முத்தும்...

சிப்பியை எடுத்து அதன் உட்புறத் திசுவைக் கீறி நுண்ணிய பாகங்களாகத் துண்டித்து வைத்திருப்போம். அந்த ஒவ்வொரு நுண்ணிய பாகத்தையும் எடுத்து, மயக்கத்தில் பிளந்திருக்கும் ஒவ்வொரு சிப்பியின் உள்ளேயும் ஊசி மூலம் கொண்டு சென்று வைத்துவிடுவோம். உடனே சிப்பி அந்தப் பொருளைச் சுற்றிலும் திரவத்தைச் சுரக்க ஆரம்பித்து விடும்.''

''அப்படியென்றால் இயற்கை முத்துக்கும் செயற்கை முத்துக்கும் அதிக வித்தியாசம் கிடையாதா?''

''வித்தியாசமே கிடையாது. செயற்கை முத்தில் சிப்பிக்குள்ளே வைக்கும் வெளிப் பொருளின் வடிவத்தை நாம் தீர்மானிக்கிறோம். அவ்வளவுதான். ஜப்பானில் மீன் பிடி தொழிலை விட முத்துத் தொழிலில்தான் அதிக லாபம், தெரியுமா?''

''83–ம் வருடம் மீன் துறை கொடுத்தது. அப்புறம் சிப்பிகளுக்கு என்ன செய்தீர்கள்?''

''அடுத்த இரண்டு வருடங்கள் கடலடியிலிருந்து சிப்பிகளை எடுக்க ஜப்பானிலிருந்து விலையுயர்ந்த மெஷின்களைத் தருவித்தோம். இது மட்டுமல்லாமல் சிப்பிகளையே செயற்கைமுறையில்வளர்க்கவும்ஒருசிப்பிப் பண்ணை (Hatchery) நிறுவத்தீர்மானம் செய்து அதற்கான கட்டடம் கூடக் கட்டி முடித்தாயிற்று. ஆனால் சிப்பிகளைத் தயார் செய்யவில்லை.''

''ஏன்? ஏன்.....? அட ஏனய்யா சிரிக்கிறீர்கள்?''

''அங்கேதான் சார் தகராறே....''

**எ**ன்ன தகராறு? வழக்கமான நிர்வாகம் – தொழிலாளர் தகராறு. இவர்கள் அவர்கள் மீது ஏகப்பட்ட குற்றச்சாட்டுக்களைச் சுமத்த, அவர்கள் அந்தக் குற்றச்சாட்டுக்கெல்லாம் பொய், தவறான கருத்துக்கள் என்று கூறி தொழிலாளர் மீது பதில் குற்றச்சாட்டுக்களைச் சுமத்த இடையில் பலியாவது முத்தான ஒரு திட்டம்.

முதலில் தொழிலாளர் தரப்பில் ஒரு குற்றச்சாட்டு: ''குருசடைத் தீவில் போய் பணியாற்றும் தொழிலாளர்களுக்கு (அங்கு மின் வசதி கூட இல்லை; குடிநீர் கூடக் கரையிலிருந்துதான் போக வேண்டும்) சில அடிப்படை வசதிகளைத் தொழிலாளர்கள் கேட்கப் போக நிர்வாகம் மறுத்துவிட்டது. யூனியன் அமைத்துத்தொழிலாளர்கள் அதை கம்யூனிஸ்ட் யூனியனோடு இணைத்தார்கள். நிர்வாகத்துக்கு அது பிடிக்கவில்லை. ஏதா



* இந்த வலைப் பெட்டிகளுக்குள்தான் சிப்பிகளை வைத்துக் கடலுக்குள் தொங்க விடுகிறார்கள்.

வது காரணம் காட்டி, முத்து நிறுவனத்துக்கு மூடு விழா நடத்த உத்தேசிக்கிறார்கள்''

''இதற்கு நிர்வாகம் என்ன பதில் சொல்கிறது?''

''1982–ல் பெரும் அளவிலே சிப்பிகள் கிடைக்கின்றன என மீன் இலாகா தெரிவித்ததால்தொடர்ந்துஒவ்வொருஆண்டும்கிடைக்கும் என்ற நம்பிக்கையில் நல்லெண்ணத்தோடு இந்தத் திட்டத்தை அரசின் மீன் இலாகாவும் ஸ்பிக் நிறுவனமும் சேர்ந்து ஆரம்பித்தது. 84, 85 ஆண்டுகளில் ஓரளவு சிப்பிகள் கிடைத்தாலும் இவை தரமானதாக இல்லை. சிப்பிகளின் கருக்களிலே மூலக்கரு உருண்டைகளை வைக்க, 50 மி.மீ. அளவுள்ளதான சிப்பிகள் தேவை. ஆனால் துரதிர்ஷ்டவசமாகக் கிடைத்த எல்லாச் சிப்பிகளுமே 10 - 25 மி.மீ.தான் இருந்தன. எனவே, இவைகளை 50 மி.மீ. வரை வளர்க்க முயற்சி எடுக்கப்பட்டது. ஆனால் சிப்பிகளை இறக்காமல் ஒரு வகைப் பூச்சித் தாக்குதலிலிருந்து காப்பாற்றவே ஏகப்பட்ட செலவாயிற்று. எனவே லாபம் அடைய வழியில்லாது போயிற்று. மேலும் 1986–ல் சிப்பிகள் அறவே கிடைக்கவில்லை. இதனைத் தமிழக மீன் இலாகாவும் ஊர்ஜிதம் செய்கிறது. நஷ்டத்தில் ஒரு தொழிலை நடத்த முடியாது என்பது ஒருபுறமிருக்க, தொழிலாளர்களின் ஒரு பிரிவினர் வேலைக்குப் போவதில் அக்கறைகொண்ட இதர தொழிலாளர்களைத் தடுத்துநிறுத்தி, தினந்தோறும்சுத்தப்படுத்தப் படவேண்டியசிப்பிகளைப்பராமரிக்கமறுத்ததன் காரணமாக ஓரளவு வளர்ந்து பலன் தந்திருக்கக் கூடிய சிப்பிகளும் இறந்து போகக் காரணமானார்கள்!'' — இப்படி பதில் தாக்குதல் நடத்துகிறது நிர்வாகம்.

தொழிலாளர் தரப்பில் அடுத்த குற்றச்




# இந்து எக்ஸ்போர்ட்ஸ்

(a unit of Indu group companies)

155, வடக்கு உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை-600 017.
போன் : 445529 & 447333. டெலக்ஸ் : 8868 TANEX-IN

கீழ்கண்ட வட்டி விகிதங்களில்
பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகிறது.

பின் தேதியிட்ட வட்டி காசோலைகள்
முன்னதாகவே அளிக்கப்படுகிறது.




கவர்ச்சிகரமான அன்பளிப்புகளும் உண்டு







Deposits will be accepted upto a limited numbers only, first come first served basis

with compliments from :

இந்து லீசிங் & பைனான்ஸ் லிமிடெட்
இந்து பைனான்சியர்ஸ்
இந்து சிட் பன்ட்ஸ் (மதுரை) பிரைவேட் லிமிடெட்
தமிழ்நாடு எக்ஸ்போர்ட்ஸ் (பி) லிமிடெட்

154, வடக்கு உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை-17. போன் : 447888
220, N.S.C. போஸ் ரோடு, G.T. சென்னை-1. போன் : 25901 & 25178
194, வக்கீல் புது தெரு, மதுரை-625 001. போன் : 34940 & 31351
106, பெரிய தெரு, திருவண்ணாமலை-606 601. போன் : 2681
22, வணிகர் தெரு, காஞ்சீபுரம்-631 501. போன் : 3048

TAS

**GROW RICH WITH INDU**

சாட்டு இது: ''இதுவரை சுமார் முப்பது கிலோ முத்துக்கள் உற்பத்தியாகியுள்ளன. எல்லாம் நிர்வாக இயக்குனரின் சொந்தப் பொறுப்பில் உள்ளன. 'எதிர்பார்த்த விலை கிடைக்கவில்லை' என்று பொய் சொல்கிறார்கள். ஜப்பான் நாட்டிலிருந்து வந்தவர்கள் முத்துக்களின் தரத்தைப் பார்த்து அதிசயித்தார்கள்!''

நிர்வாகத்தின் பதில்: ''இது தவறான செய்தி. சுமார் பத்து கிலோ மட்டுமே இதுவரை உற்பத்தி செய்துள்ளோம். அதிலும் பத்து விழுக்காடு மட்டுமே நல்ல முறையில் அமைந்திருக்கிறது. 40-50 விழுக்காடு நடுத்தரம். மீதம் கடைத் தரம். உற்பத்தியின் அளவை மீன் வள இலாகா, ஸ்பிக் நிறுவனம், கடன் வழங்கிய வங்கி ஆகியவற்றின் அதிகாரிகள் பார்வையிட்டுச் சென்றுள்ளனர். லாபகரமான விலை கிடைத்தால் விற்காமல் இருப்போமா? நஷ்டத்துக்கு விற்க வேண்டாம் என்று நல்ல விலையை எதிர்பார்த்துத்தான் காத்திருக்கிறோம்.''

''இந்தத் துறையில் கோடிக் கணக்கில் லாபம் வரும். அதை 50:50 சதம் என்ற விகிதத்தில் அரசோடு பகிர்ந்து கொள்வானேன்? என்று ஸ்பிக் யோசிக்கிறது. முதலில் நஷ்டக் கணக்குக் காட்டி மூடிவிட்டு, அப்புறம் நைஸாகத் தனியே துவங்கலாம் என்பது அவர்கள் நோக்கம்!'' என்று தொழிலாளர் தரப்பில் மேலும் ஒரு குற்றச்சாட்டு.

இதற்குத் தமிழ்நாடு முத்து நிறுவனத்தின் நிர்வாக இயக்குனர் என்ன பதில் கூறுகிறார்? ''வளமான கற்பனை'' என்கிறார். ''ஏகப்பட்ட நஷ்டம் வரும்போது யார்தான் நடத்த முன் வருவார்கள்?'' என்று கேட்கிறார்.

**பா**ண்டி நாட்டிலிருந்து கிரேக்கம் வரை முத்துக்கள் போயின என்றும் தூத்துக்குடி முத்துக்களின் வளத்துக்காகவே அன்று பல ஆட்சி மாற்றங்கள், படையெடுப்புக்கள் நிகழ்ந்தன என்றும் சரித்திரம் பேசுகிறது. அப்படிப்பட்ட முத்தான தொழில் இன்று குப்பைக்குத்தான் போக வேண்டுமா?

இதில் இரண்டு அம்சங்கள் உள்ளன. நஷ்டம்தான் வரும், இனி நடத்த முடியாது என்றால், ஆரம்பத்தில் சரியாக ஆராயாமல் இந்தத் தொழிலைத் தொடங்கி, மக்களின் வரிப் பணத்தை இதில் முடக்கி, வீணடித்தவர்கள் பெருங் குற்றவாளிகளாகிறார்கள். ஒன்றா இரண்டா? இருபது லட்சம் ரூபாய் முதலீடும் அரசுடைமையான வங்கிக் கடன் வசதி நாற்பத்தைந்து லட்சமும் அல்லவா பெற்றிருக்கிறார்கள்? இரண்டாவது அம்சம், இவ்வளவு செலவு செய்த பின், 'அம்போ' என்று விட்டு விடுவதைக் காட்டிலும் ஜப்பானிய நிபுணர்களின் ஒத்துழைப்புடன் இதனை லாபகரமாக இயக்க முடியாதா என்பதை நன்கு ஆராய வேண்டும். இதைச் செய்யாது போனால், மக்களுக்கு நிர்வாகிகள் துரோகம் இழைத்தவர்களாவார்கள். மக்களின் பணம் மேலும் பல லட்சம் விரயமாகும் என்பது உறுதியாகத் தெரிந்தாலொழிய தொழிலை எப்படியாவது மீட்கப் பார்க்க வேண்டும். இதற்குத் தொழிலாளர்களும் ஒத்துழைப்புத்தர வேண்டும். 'ஜப்பானியத்தொழிலதிபர்கள் இத்தொழிலில் கோடி கோடியாகச் சம்பாதிக்கிறார்கள்; நம்மவர்தான் ஏமாற்றுகிறார்கள்' என்று குற்றம் சுமத்தும் நமது தொழிலாளர்கள், ஜப்பானியத் தொழிலாளர்கள் எப்படிப்பட்ட தேசப் பக்தியும் உழைப்பார்வமும் கொண்டிருக்கிறார்கள் என்பதையும் உணர்வது நல்லது. தேச பக்தி என்பது தேசிய கீதம் பாடப்படும்போது மரியாதை காட்டி எழுந்து நிற்பதோடு முடிந்து போகிற விஷயமில்லை. நாம் பணியாற்றும் நிறுவனத்துக்கு நஷ்டத்தைத் தவிர்க்கவும் லாபத்தைப் பெருக்கவும் முழு ஒத்துழைப்புத் தருவதே சிறந்த தேச பக்தி. ஒரு நிறுவனத்தின் லாபம் என்பது நாட்டின் வளம் என்பது உணரப்பட வேண்டும்.

**— நமது நிருபர்கள்**

இராமநாதபுரம் மாவட்டம் தொடர்பான புகைப்படங்கள், மேலட்டை வண்ணப் படங்கள்: **கே. வி. ஆனந்த்**

## அடுத்த இதழில்...



COVER STORY

## தலையில் சூடும் மல்லி; தரையில் துவளும் விவசாயி!

## வேத வைதிக நூல்கள் விலை தபால் செலவு உட்பட:

**I**
1. ஸாமவேத அஷ்டப்ராம்மணம் — நாகராக்ஷரம் — 3 பாகங்கள், விலை ரூ. 212/—
2. ஸாமவேத ஸம்ஹிதா — நாகராக்ஷரம் — 2 பாகங்கள் (ஸ்வரத்துடன்) விலை ரூ. 112/—
3. ஸாமவேத ஸம்ஹிதா (ஸ்வரத்துடன்) கிரந்தாக்ஷரம் — 2 பாகங்கள் விலை ரூ. 237/—
4. சாந்தி குஸுமாகரம் (கிரந்தாக்ஷரம்) — 2 பாகங்கள் விலை ரூ. 77/—
5. ஸ்மார்த்த தந்த்ர ஸுதாநிதி (ஸாமவேத பூர்வாபர ப்ரயோகம்) விலை ரூ. 57/—

**II** க்ரந்தாக்ஷரத்தில் ஸ்வரத்துடன் மணக்கால் பிரம்மஸ்ரீ முத்து ச்ரௌதிகளால் பதிப்பிக்கப்பட்ட கிரந்தங்களின் மறுபதிப்புக்கள்
1. போதாயனபூர்வாபரப்ரயோகம், விலை ரூ. 72/—;
2. ஆபஸ்தம்பபூர்வாபரப்ரயோகம், விலை ரூ. 67/—;
3. ஆபஸ்தம்பச்ரார்த்தப்ரயோகம், விலை ரூ. 32/—;
4. ஆச்வலாயன பூர்வாபர ப்ரயோகம், விலை ரூ. 62/—;
5. ஆச்வலாயன ச்ரார்த்த ப்ரயோகம், விலை ரூ. 27/—; 6. கல்பசிந்தாமணி, விலை ரூ. 37/—.
7. ஆஹிதாக்னி ப்ரயோகம் விலை ரூ. 22/—.

**III** நாகர அக்ஷரம் — நாகர பதத்திற்குத் தமிழ் அர்த்தத்தோடு
1. ஸ்ரீமத் பாகவதம் — 5 Volumes — 12 ஸ்கந்தங்கள், விலை ரூ. 417/—; 2. ஸுந்தர காண்டம், விலை ரூ. 82/—; 3. ஸ்ரீநாராயணீயம், விலை ரூ. 57/—.

**IV** 1. மனுசேச்லோக, ராமமந்த்ராசேச்லோக, விலை ரூ. 11/—; 2. ஸ்ரீ ராதா க்ருஷ்ண பூஜா விதானம், விலை ரூ. 12/—; நனோதந்தம் (நைஷத காவ்யத்தின் சுருக்கம்) விலை ரூ. 11/—; 4. வேத பாட வழிமுறை (Syllubus) (ரிக், யஜுர், ஸாம) விலை ரூ. 10/—.

V. P. P. யில் அனுப்புவதில்லை. பூராத் தொகையையும் M.O. or Draft மூலம் அனுப்பவும். செக்மூலம் அனுப்ப வேண்டாம்.

**அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி,**

**D-76, மூன்றாவது கிராஸ், ஸ்ரீநகர் காலனி, கும்பகோணம்—612 001**

---

25ம் ஆண்டு வெள்ளி விழாவை காணும்




**கார்னேசன் ஜுவல்லர்ஸ்** ஸ்தாபனத்தார் வழங்கும்
**மாபெரும் சிறப்பு பரிசு திட்டம்**
*தாங்களும் அதிர்ஷ்டசாலியாக இருக்கலாம் அல்லவா*

| மாதம் | 25 மாதங்களுக்கு | வட்டி | மொத்தம் |
|---|---|---|---|
| ரூ. 100 | ரூ. 2,500 | ரூ. 350 | ரூ. 2,850 |

மாதம் ரூ. 100 வீதம் செலுத்தி 25 வது மாதத்தில் ரூ. 2500 உடன் வட்டி 350 சேர்த்து மொத்தம் ரூ. 2,850 ஆகவும். இந்த திட்டத்தில் நடக்க இருக்கும் குலுக்கலில் வெற்றி பெற்றவருக்கு பரிசுத் தொகையான ரூ. 10,000 த்திற்கு வாடிக்கையாளர்களின் விருப்பப்படி வைரத்தோடு அல்லது தங்கநகையாக கொடுக்கப்படும் என்பதை மகிழ்வுடன் வாடிக்கையாளர்களுக்கும், கண்பர்களுக்கும் தெரியப்படுத்துகிறோம்.

வாடிக்கையாளர்கள் அங்கத்தினர்களின் வேண்டுகோளை முன்னிட்டு புதிய 'C' குரூப் ஆரம்பிக்கின்றோம், என்பதை [illegible]சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். குறிப்பிட்ட காலத்திற்கு [illegible] வடையவும்.

விபரங்களுக்கு நேரிலோ அல்லது தபால் மூலமோ [illegible] கொள்ளவும்.

# கார்னேசன் ஜுவல்லர்ஸ்

தெற்காவணி மூலவீதி, (Y. M. C. A.) சமீபம்), மதுரை-1. போன்: 30108.

— கண்ணன்




"பயங்கரவாதிகளுடன் எவ்வித ஒப்பந்தமும் வேண்டாம்"
—மத்திய அரசுக்கு ஆளும் அகாலிதளத் துணைத் தலைவர் எச்சரிக்கை!









தமிழக மக்களுக்கு நான்
அளிக்கும் புரட்சிகரமான
செயற்கை மழை!



தேர்தலை சுற்றுப் பயணத்தின் போது எம்.ஜி.ஆர்.
112 திட்டங்களுக்கு
அடிக்கல் நாட்டு விழா
நடத்தி வைத்தார்!




கல்கி

1987 ஏப்ரல் 26
மலர் 45 இதழ் 39
பிரபவ சித்திரை 13




# திருவாளர் அசுத்தம்!

'திருவாளர் சுத்தம்,' 'பரிசுத்தம்' என்றெல்லாம் வர்ணிக்கப்பட்டு வந்த ராஜீவ், தற்போது, 'திருவாளர் அசுத்தம்,' 'ரொம்ப அசுத்தம்' என்று உருமாறி வருவது வருந்துதற்குரியது. பாகிஸ்தான் பூச்சாண்டி காட்டி, வி. பி. சிங்கை இலாகா மாற்றம் செய்து, நம் காதிலே பிரதமர் சுற்றிய பூ, இன்னும் வாடி உதிரவில்லை. அதற்குள் என்னவெல்லாம் நடந்து விட்டன! ஜனாதிபதியைப் பிரதமர் மதிக்கவில்லை என்பதும் ஜனாதிபதி — பிரதமர் நல்லுறவு குறித்து உண்மைக்குப் புறம்பாகப் பிரதமர் நாடாளுமன்றத்திலேயே பேசியிருக்கிறார் என்பதும் வெட்ட வெளிச்சமாயின. ஜனாதிபதியின் கடிதத்தை அம்பலப்படுத்திய எக்ஸ்பிரஸ் பத்திரிகை அதிபர் கோயங்கா வீட்டில் சோதனைகள் நடந்தன. அதே பத்திரிகையில் ரிலையன்ஸ் ஊழல்களை நாடறியச் செய்த குருமூர்த்தி கைதானார்.

ஒரு பொய்யைக் காப்பாற்றப் பல பொய்கள் கூற வேண்டியிருக்கும் என்பதும் ஓர் ஆணவமான தவற்றினை நியாயப்படுத்தப் பல தவறுகள் செய்ய வேண்டியிருக்கும் என்பதும் உண்மையாயிற்று. குருமூர்த்தியைக் கைது செய்து விசாரிக்கப் போக, ஃபேர்பேக்ஸ் விவகாரம் விசுவரூபமெடுத்தது! வி. பி. சிங்கை ராணுவ அமைச்சராக்கியதில், முப்பது கோடி கமிஷன் விவகாரம் பூதாகாரமாக வளர்ந்து பிரதமரை அச்சுறுத்துகிறது! எல்லாவற்றையும் பூசி மெழுகி மறைக்க முயன்றதில் ஒரு நேர்மையாளர் பலி கடா ஆகியிருக்கிறார்! வி. பி. சிங்குக்கு அமைச்சரவையில் இடமில்லை என்றால் அங்கே நேர்மைக்கு இடமில்லை என்று அர்த்தம்.

வி. பி. சிங் செய்த குற்றம் என்ன? வரி ஏய்ப்பவர்களை வளைத்துப் பிடிக்க முயன்றதும் லஞ்ச ஊழலை ஒழிக்க நடவடிக்கை எடுத்ததும்தான். இதற்காக அவர் பெற்ற தண்டனைகள் பதவி மாற்றம், பதவிப் பறிப்பு!

இன்றைக்கும் காங்கிரஸ்காரர்கள் வி. பி. சிங் மீது அப்பழுக்குக் காண முடியவில்லை. 'பிரதமரின் நண்பர், அவருடைய நம்பிக்கைக்குரியவர்' என்றுதான் பேசுகிறார்கள்! ஆனால், வி. பி. சிங் நடந்து கொண்டவிதம் தவறாம்! நீர்மூழ்கிக் கப்பல் பேரத்தில் கமிஷன் அடித்தது யார் என்று ஆராயப் போனால் ராணுவ ரகசியங்கள் அம்பலமாகி விடுமாம்! ஃபேர் பேக்ஸ் என்ற அமெரிக்க நிறுவனத்தைத் துப்பறிய நியமித்தது நமது நாட்டின் சுய கௌரவத்துக்கு இழுக்காம்! இத்தகைய பேச்சு, நமக்குப் பாக்கி இருக்கும் ஒரு காதிலும் பூ சுற்றுகிற வேலையாகிறது! நீர் மூழ்கிக் கப்பல்களை மேற்கு ஜெர்மனியிலிருந்து வாங்கினால் அவற்றின் ஆற்றல் பற்றிய முழு விவரங்களும் வல்லரசுகளுக்குத் தெரியாமல் இருக்கவே முடியாது. அந்த அளவுக்கு இன்று ராணுவ ஒற்றாடல், மேல் நாடுகளில் வளர்ச்சி அடைந்திருக்கிறது. உண்மையில், இதற்கு எவ்வளவு கமிஷன், யாருக்குத் தரப்பட்டது என்ற விவரம் கூட வல்லரசுகளுக்கு ஏற்கெனவே தெரிந்திருக்கும்! பாரத மக்களுக்குத்தான் தெரிய வரவில்லை! ஃபேர்பேக்ஸ் விவகாரத்தை எடுத்துக் கொண்டாலும், அந்நியச் செலாவணி ஊழல் புரிந்து அயல்நாட்டில் பணம் குவிப்பவரை, உள்நாட்டில் ஸி. ஐ. டி. யும் ஸி. பி. ஐ. யுமா துப்பறிந்து கண்டுபிடிக்க முடியும்?

தாம் எடுக்கப் போகும் நடவடிக்கைகள் பற்றிப் பிரதமருக்கு வி. பி. சிங் தெரிவிக்கவில்லை; இதனால் பிரதமரை ஒரு தர்மசங்கடத்தில் ஆழ்த்திவிட்டார்' என்பது மேலும் ஒரு குற்றச்சாட்டு. இதில் பிரதமருக்குத் தர்ம சங்கடம் என்ன? உண்மைகள் வெளிப்படுவதைப் பிரதமர் விரும்பவில்லை என்றால்தானே தர்ம சங்கடம்? பிரதமர் யாரைக் காப்பாற்ற முயன்று தர்ம சங்கடத்துடன் நெளிகிறார்? ஒவ்வொரு விஷயத்துக்கும் பிரதமரின் அனுமதி பெற்ற பின்தான் அமைச்சர் இயங்க வேண்டும் என்றால், நிர்வாகம் நத்தை வேகத்தில் கூட முன்னேறாது. நல்லது கெட்டதற்குக் கூட்டுப் பொறுப்பு ஏற்பது அமைச்சரவையே என்றாலும் 'இதற்கு இவர் தகுதியானவர்' என்று நிர்ணயித்துப் பொறுப்பை ஒப்படைத்தபின், அவரிடம் நம்பிக்கை வைத்துச் சுதந்திரமாக இயங்க அனுமதிப்பதுதான் பிரதமருக்கு அழகு. மேலும், இன்று இப்படி தர்மசங்கடத்துடன் நெளியும் பிரதமர், நேற்று வி. பி. சிங் அவரது அனுமதியை நாடியிருந்தால் ஓ.கே. சொல்லியாயிருக்கப் போகிறார்?

இப்போது புகைவதால் நெருப்பு இருப்பது தெரிகிறது; பிரதமரை வி. பி. சிங் அனுமதி கேட்டிருந்தால் புகையே நம் கண்களுக்குப் புலப்பட்டிராது!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதி

# முன்னாள் அமைச்சர்கள் என்ன செய்கிறார்கள்?



* மௌனம் ஏன்?



* அதிசய மனிதர்!



* காலடியில் கலெக்டர்



* விமானப்படை விமானம்

*** கே. வி. நாதன், நெய்வேலி.**

**? சட்டசபை நிகழ்ச்சிகளைத் தொலைக் காட்சியிலும் விடியோ படம் எடுத்தும் காண் பிக்கப்பட வேண்டும் என்று ஹெக்டே கூறி யிருப்பது குறித்து?**

! இப்படிச் செய்தால் தங்கள் இமேஜைப் பாதுகாத்துக் கொள்ள எம்.எல்.ஏ.க்களும் மற்றவர்களும் சட்டசபையில் கண்ணியமாக நடந்து கொள்வார்கள் என்பது ஹெக்டே யின் எண்ணம். ஆனால் டி.வி., ரேடியோ ஆகியவை அரசு இலாகாவின் பிடியில் சிக்கி யிருக்கும்போது இது எப்படிச் சாத்திய மாகும்? சட்டசபை நிகழ்ச்சிகளைப் படம் பிடித்தாலும் இமேஜைக் கெடுக்கக் கூடிய பகுதிகளை ஒலி/ஒளி பரப்ப மாட்டார்களே!

*** மு. மதிவாணன், அரூர்.**

**? தமிழகத்தில் மேலும் மூன்று பல்கலைக் கழகங்கள் அமைக்கப்படும் என்று கல்வி அமைச்சர் கூறியிருக்கிறாரே?**

! ஆளுங்கட்சிக்கு வேண்டியவர்கள் மூன்று பேர் இன்னும் பதவியில்லாமல் இருக்கிறார் களோ, என்னவோ!

*** இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.**

**? அம்பிகாவின் அம்மா தமது கார் டிரை வரிடம் வம்பிழுத்துப் பின் மன்னிப்புக் கேட் டது தேவைதானா?**

! 1. வம்பிழுத்தது — செல்வம் செல்வாக்கு காரணமாகப் பண்பாட்டை மறந்து. 2. தமது வம்புகளுக்கும் நியாயம் கற்பிக்க முயன் றது — தம் பக்கம் "கை" ஓங்கியிருக்கும் என்ற நம்பிக்கை. 3. கடைசியில் மன்னிப் புக்கேட்டது—தொழிலாளர்களின் ஒற்றுமை.

*** எஸ். சிவசங்கர், மன்னம்பந்தல்.**

**? ஸ்ரீரங்கம் சம்ப்ரோக்ஷணத்துக்கு ஆர்.வி. மக்கள் வரிப்பணத்தில் — விமானப்படை விமானத்தில் வந்து போவது அவசியம் தானா?**

! சட்ட பூர்வமாகவும் விதிமுறைகளின் படியும் இப்படி விமானப் படை விமானத் தைப் பயன்படுத்திக் கொள்ள ஜனாதிபதி, துணை ஜனாதிபதி, பிரதமர் ஆகியோருக்கு உரிமைகள் இருக்கலாம். ஆனால் உரிமைகள் பொறுப்புணர்ச்சியோடு கைகோத்துச் செல்ல வேண்டும். மிகவும் அத்தியாவசிய மானாலொழிய அந்த உரிமையைப் பயன் படுத்தக் கூடாது. துணை ஜனாதிபதி, பிரதமர் ஆகியோர் சிக்கனத்தைக் கடைப்பிடிக்காது போனால், அரசு அதிகாரிகள் எப்படிச் சிக்கன மாக இருப்பார்கள்? உற்பத்திக்கு உதவாத அரசுச் செலவினங்கள் பண வீக்கத்தையும் விலைவாசி உயர்வையும் அதிகரித்து மக்களைத் தான் துன்பப்படுத்தும். ஏழை இந்தியாவுக்கு இவர்கள் போக்கு நலன் பயக்காது.

நீங்கள்
கேட்டவை
— குராசு

* டி. தாழை பிரபு, குடியாத்தம்.

? ஆந்திர மந்திரி முதுகிருஷ்ணமநாயுடு ராஜினாமா குறித்து?

! தேர்வுக்கு முன்பே கேள்வித் தாள்கள் வெளியாகிவிட்டதற்காக ராஜினாமா செய்ததைத்தானே சொல்கிறீர்கள்! தன்மானமும் நடந்துவிட்ட தவறுக்குப் பொறுப்பேற்கிற தார்மீக பலமும் இன்னும் சிலரிடமாவது எஞ்சியுள்ளன என்பதற்கு இது ஓர் உதாரணம். ஆகாசத் தவறுகளெல்லாம் மூடி மறைக்கப்படுகிற தேசத்தில் இவர் ஓர் அதிசயம்தான்.

* ர. பழனிசாமி, இராவணாபுரம்.

? செங்கல்பட்டு மாவட்ட ஆட்சித் தலைவர், எம். ஜி. ஆர். காலில் விழுந்தது பற்றி?

! கலெக்டர் பதவிக்கே இழுக்கு!

* எம். டி. பழனி கதிர், ஆலங்குளம்.

? முன்னாள் அமைச்சர்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்?

! இது கூடவா தெரியாது! தீவிர கட்சிப் பணி!!

* கே. என். ஸ்ரீனிவாஸ், கொரட்டூர்.

? புகுந்த வீடு —
விளக்கேற்றச் சென்றேன்...
பிறகுதான் தெரிந்தது.
அங்கு —
திரியே நான்தானென்று!
— இந்தப்புதுக்கவிதைகுறித்துத்தங்கள் மதிப்பீடு என்ன?

! பிரசுரித்துவிட்டதிலிருந்தே தெரியவில்லையா தகுதியுள்ளதென்று! அதுசரி, இது உங்கள் கவிதைதானா? அப்படி குறிப்பிடவில்லையே, நீங்கள்?

* அ. து. பூ. சௌமியன், விருத்தாசலம்.

? நான்கு பெரிதா? ஐந்து பெரிதா?

! இன்னொரு முறை கேட்டால் மூன்று தான் பெரிது என்று சொல்லி விடுவார் பாண்டிச்சேரி சபாநாயகர்.

* இதயகீதா, நாட்டரசன் கோட்டை.

? மனைவியை முகம் கோணாமல் வைத்துக் கொள்வது எப்படி?

! கணவன் என்ற முறையில்தானே இந்தக் கேள்வியைக் கேட்கிறீர்கள் இதய கீதா? ஏதோ இஸ்திரி போடுவதாக நினைத்துக் கொண்டு, 'நீ கோணினாலும்கூட அழகுதான்' என்று வர்ணித்திருப்பீர்கள். அதனால் வந்த வம்புதான் இது. முதலில் ஒரு நல்ல நிலைக் கண்ணாடிக்கு ஏற்பாடு செய்யுங்கள். நிலைமை சீராகிவிடும்.

* வி. ஜி. உஷா, கல்கத்தா — 19.

? ஆலங்கட்டி மழை, பேய் மழை, சின்ன சின்ன மழை — இவற்றில் எதை நீங்கள் அதிகம் விரும்பி ரசிப்பீர்கள்?

! கிண்டலா! மண்டை காய்கிற நிலையில் எந்த மழை பெய்தாலும் கண்ணை மூடிக் கொண்டு வரவேற்பேன்.

* மு. சிவஞான முருகன், ஸ்ரீவைகுண்டம்.*

? விகடன் ஆசிரியருக்குச் சட்டசபை கொடுத்த தண்டனையை வாபஸ் பெற வேண்டுமென்று வற்புறுத்திய மத்திய அமைச்சர் சிதம்பரம், தேசபக்தியோடு செயல்பட்டு ரிலையன்ஸ் கம்பெனி ஊழல்களை வெளிச்சத்திற்குக் கொண்டுவந்த குருமூர்த்தியை, மத்திய அரசு கைது செய்த போது மௌனம் சாதித்தது ஏன்?

! அமைச்சர் பதவி என்பது எல்லாவற்றையும்விட மேலானதென்று கருதுவது தான் காரணம்.

* கோ. சு. சுரேஷ், கோவை — 9.

? ஷார்ஜாவில் அடைந்த இன்னொரு தோல்வி பற்றி?

! 'கையில் எடுத்தது கண்டனர், இற்றது கேட்டனர்' — என்று கம்பன் வர்ணித்தபடி, பேட்டைக் கையில் பிடித்தது கண்டோம். அடுத்து அவுட்டானதைத்தான் கேட்டோம் என்கிற மாதிரி நமது ஆட்டக்காரர்கள் விளையாடினால் என்ன செய்வது? தோல்வி நமக்குப் புதிதல்ல என்பதே ஆறுதலானாலும், கோப்பை பாகிஸ்தான் வசம் போய்விடவில்லை என்பது மேலும் ஆறுதல்தானே! வேறு வழி? இப்படித்தான் சமாதானமடைய வேண்டும்!

* ஆற்காடு எழிலன், திருச்சி — 2.

? தமிழ்நாட்டில் சேர்ந்தே இருப்பது எது? பிரிக்க முடியாதது எது?

! இரண்டுக்கும் ஒரே பதில்தான்; அரசியல்வாதிகளும் லஞ்சமும்.

* ரூ. 15 பரிசு பெறுபவர்:

மு. சிவஞான முருகன்,
8, சிவன் கோயில் தெரு,
ஸ்ரீவைகுண்டம் — 628 601.

**ஸ்ரீ காஞ்சி காமகோடி பீட கர்நாடக சங்கீத ஸேவா ட்ரஸ்ட்,**
**சென்னை — 17**

## மூன்றாவது ஆண்டு சங்கீத மும்மூர்த்திகள் ஜெயந்தி விழா

**திருவாரூர் V.S.T. ஆண்கள் மேல்நிலைப் பள்ளி அரங்கில் நடைபெறும்**

---

**29.4.87 (புதன்கிழமை) ஸ்ரீ சியாமா சாஸ்திரி ஜெயந்தி நாள்**

| | | |
|---|---|---|
| காலை | 8.30 | நாதஸ்வரம், பூஜை மற்றும் கோஷ்டி கானம். (ஸ்ரீ சாஸ்திரி அவர்களின் இல்லத்தில் நடைபெறும்) |
| மாலை | 5.30 | ஜெயந்தி இசை விழாவைத் துவக்கி வைப்பவர்: தமிழ்நாடு ஆளுநர் மேதகு எஸ்.எல். குரானா. |
| | 6.30 | மகாராஜபுரம் சந்தானம்—பாட்டு, கண்டதேவி அழகிரிசாமி—வயலின், வேலூர் ராமபத்ரன்—மிருதங்கம் |
| | 8.00 | நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன் — நாதஸ்வரம், வலையப்பட்டி ஏ.ஆர். சுப்பிரமணியம் —ஸ்பெஷல் தவில் |

---

**30.4.87 (வியாழக்கிழமை) ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர் ஜெயந்தி நாள்**

| | | |
|---|---|---|
| மாலை | 5.00 | மகாராஜபுரம் நாகராஜன் — பாட்டு, சி.என். சந்திரசேகர்—வயலின், வி. ராஜசேகர்—மிருதங்கம் |
| | 6.00 | டி.கே. ஜெயராமன்—பாட்டு, டி.கே.வி. ராமானுஜாசார்லு—வயலின், ஜே. வைத்தியநாதன்—மிருதங்கம் |
| | 7.30 | நேதனூரி கிருஷ்ணமூர்த்தி—பாட்டு, எம். சந்திரசேகரன்—வயலின், குருவாயூர் துரை—மிருதங்கம் |
| | 9.00 | திருமுருக கிருபானந்தவாரியார் — 'இசையின் சிறப்பு' பற்றி சொற்பொழிவு. |

---

**1.5.87 (வெள்ளிக்கிழமை)**

| | | |
|---|---|---|
| காலை | 8.30 | சுதா கிருஷ்ணன் — பாட்டு, விட்டலா ராமமூர்த்தி — வயலின், தஞ்சாவூர் குமார் — மிருதங்கம் |
| | 9.30 | டி.எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரிகள் — 'ஸ்ரீ தியாகராஜ ராமாயணம்' சொற்பொழிவு. |
| மாலை | 5.00 | சுதா ரகுநாதன் — பாட்டு, பீ. லலிதா—வயலின், திருவாரூர் கிருஷ்ணமூர்த்தி—மிருதங்கம் |
| | 6.00 | டாக்டர் என். ரமணி—புல்லாங்குழல், எஸ்.டி. ஸ்ரீதர்—வயலின், திருவாரூர் பக்தவத்ஸலம்—மிருதங்கம், வி. நாகராஜன் — கஞ்சிரா |
| | 7.30 | கே.ஜே. ஜேசுதாஸ் — பாட்டு, ஜி.ஜே.ஆர். கிருஷ்ணன் — வயலின், திருச்சூர் மோகன்—மிருதங்கம், டி.எச். விநாயகராம் — கடம் |
| | 9.00 | டி.எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரிகள் —'ஸ்ரீ தியாகராஜ ராமாயணம்' சொற்பொழிவு |

---

**2.5.87 (சனிக்கிழமை)**

| | | |
|---|---|---|
| காலை | 8.30 | குன்னக்குடி பாலா — பாட்டு, ஞானசுந்தரம் — வயலின், திருவாரூர் ராஜு |
| மாலை | 5.00 | எஸ். ராஜேஸ்வரி—பாட்டு, திருவாரூர் சந்தானம்—வயலின், வடபாதிமங்கலம் வெங்கட்ரமணி—மிருதங்கம் |
| | 6.00 | டி.வி. சங்கரநாராயணன்—பாட்டு, கோயமுத்தூர் தட்சிணாமூர்த்தி—வயலின், காரைக்குடி ஆர். மணி — மிருதங்கம் |

7.30 என். ரவி கிரண் — கோட்டு வாத்யம், ஆர். ரமேஷ் — மிருதங்கம், காரைக்குடி ராஜாராமன் — கஞ்சிரா
9.00 டி.எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரிகள் — 'ஸ்ரீ தியாகராஜ ராமாயணம்' சொற்பொழிவு

---

**3.5.87 (ஞாயிற்றுக்கிழமை)**

காலை 8.30 பெங்களூர் ரமாமணி — பாட்டு, ராமதாஸ் — வயலின், உமையாள்புரம் மாலி — மிருதங்கம்
10.00 புலவர் கீரன் — 'வேதாந்த மரத்தில் ஒரு வேரைக் கண்டேன்' — சொற்பொழிவு

மாலை 5.00 திருவெண்காடு ஜெயராமன் — பாட்டு, திருப்பூர் மோகன் — வயலின், தஞ்சாவூர் ராமமூர்த்தி — மிருதங்கம்
6.00 தஞ்சாவூர் எஸ். கல்யாணராமன் — பாட்டு, எம். ஆர். கோபிநாத் — வயலின், பெங்களூர் டி.ஏ.எஸ். மணி — மிருதங்கம்
7.30 லால்குடி ஜி. ஜெயராமன், ஜே. விஜயலெட்சுமி — வயலின் டூயட், டி.வி. கோபாலகிருஷ்ணன் — மிருதங்கம், புதுக்கோட்டை மகாதேவன் — மோர்சிங்
9.00 டி.எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரிகள் — 'ஸ்ரீ தியாகராஜ ராமாயணம்' சொற்பொழிவு

---

**4.5.87 (திங்கட் கிழமை)**

காலை 9.00 அகண்டம் (ஸ்ரீ தியாகராஜர் இல்லத்தில்) தொடர்ந்து 24 மணி நேரம் தியாகராஜ கீர்த்தனை பாடுவார்கள்

மாலை 5.00 சுகுணபுருஷோத்தமன் — பாட்டு, ஆலந்தூர் நடராஜன் — வயலின், செங்கோட்டை சுந்தரராஜன் — மிருதங்கம்
6.00 வி. ஆர். கிருஷ்ணன் — பாட்டு, திருவள்ளூர் பார்த்தசாரதி — வயலின், தஞ்சாவூர் ராமதாஸ் — மிருதங்கம்
7.00 மைசூர் துரைசாமி ஐயங்கார், டி. பாலகிருஷ்ணன் — வீணை டூயட், பெங்களூர் ராஜகேசரி — மிருதங்கம் வி. சுரேஷ் — கடம்
8.00 பாலக்காடு கே.வி. நாராயணசாமி — பாட்டு, கோவை பாலசுப்பிரமணியன் — வயலின், திருச்சூர் நரேந்திரன் — மிருதங்கம்
9.00 டி.எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரிகள் — 'ஸ்ரீ தியாகராஜ ராமாயணம்' சொற்பொழிவு
10.00 கமலாலயத்தைச் சுற்றி சங்கீத மும்மூர்த்திகளின் படங்கள் புஷ்பப் பல்லக்கில் நாதஸ்வர இன்னிசையுடன் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படும்.

---

**5.5.87 (செவ்வாய்க்கிழமை) ஸ்ரீ தியாகராஜ ஜெயந்தி நாள்**

காலை 9.00 நாதஸ்வரம், பூஜை மற்றும் கோஷ்டி கானம் (ஸ்ரீ தியாகராஜர் இல்லத்தில்)

மாலை 5.00 ஜெயகிருஷ்ணன் — பாட்டு, சி. லக்ஷ்மி நாராயணன் — வயலின், உதயசங்கர் — மிருதங்கம்
6.00 டி.கே. கோவிந்த ராவ் — பாட்டு, டி. ருக்மணி — வயலின், நாகூர் அம்பி ஐயர் — மிருதங்கம்
7.30 மதுரை டி. என். சேஷகோபாலன் — பாட்டு, நாகை முரளீதரன் — வயலின், கே.வி. பிரசாத் — மிருதங்கம்
9.00 ஆஞ்சநேய உத்ஸவம்



* வில்லியம்ஸ்



* நிறைகுளத்தான்

# ஆண்டவன் மனசு வெச்சா மழை; அரசு மனசு வெச்சா அணை!



* பாக்குவெட்டிப் பாலம்: இங்குதான் பாலம் வேண்டும்.

**வ**றண்ட பூமி, வறண்ட பூமி என்று முத்திரை குத்துகிறோமே, இராமநாதபுரத்தில் தண்ணீருக்கே வழி இல்லையா?

இருக்கும் சில வழிகளையும் உதாசீனம் செய்கிறார்கள் என்றுதான் தோன்றுகிறது.

உதாரணத்திற்குப் பேரையூர்.

கமுதி, முதுகுளத்தூர், கடலாடி — இந்தப் பகுதிகளில் ஆண்டிற்கு இரண்டு மாதம் மழை பெய்தால் எட்டாவது அதிசயம். அந்த நீரும், கேட்பார் யாருமின்றிக் கடலுக்குள் சென்று வீணாகிறது. ஊராட்சி மன்றத் தலைவர் நிறைகுளத்தான் வெகு பரபரப்பாக இருந்த நேரம் நாங்கள் அவரைச் சந்தித்தோம்.

பரபரப்பிற்குக் காரணம், கலெக்டர் 'குறை கேட்க' அன்று அங்கே வரவிருந்தார். ஊரே திரண்டு அலைமோதிக் கொண்டிருந்தது.

"பேரையூரை ஒரு காலத்தில் தஞ்சாவூருக்கு இணையாப் பேசுவாங்க. இப்போ இது ஒரு பாலைவனம். ஊருக்கு வரக் கூடிய தண்ணியை நாலு திசையிலும் தடுத்திட்டாங்க. திருச்சுழி பக்கத்தில் அணை போட்டு குண்டாறு. அபிராமம் பக்கத்தில் அணை போட்டுப் பரலியாறு. அதேபோல் கிருதமால் நதி எல்லாத்தையும் மறிச்சுட்டாங்க. வறட்சி என்ன செய்யுது? வேலை வெட்டி இல்லாம இருக்கறதால மனசில கெட்ட எண்ணத்தை வளர்க்குது. அடிக்கடி வகுப்புக் கலவரம் மூளுது..."

"எந்த இடத்தில தண்ணியைத் தேக்கலாம்னு சொல்றீங்க?"

"நான் சொல்றேன்" என்றார் முன்னாள் பஞ்சாயத்துத் தலைவர் வில்லியம்ஸ்.

"முதுகுளத்தூர் — அருப்புக்கோட்டை ரோடு பக்கம் அணை கட்டினால் பேரையூரும், இன்னும் பல கிராமங்களும் பயனடையும். இதைத் தவிர உங்களைப் பாக்கு வெட்டிப்



* சிதிலமடைந்த ஷட்டர்கள்.

பாலத்துக்கும் அழைச்சிட்டுப் போய்க் காட்டணும்..."

"ரொம்பத் தூரமா?"

"இதோ பக்கத்தில்தான்" என்று சொல்லிக் 'கிட்டத்தட்ட மூன்று கிலோ மீட்டர் தள்ளிக் கொண்டு போய்விட்டார்.

நெடுஞ்சாலை குழிந்து மேலே ஏறும் அந்த இடத்தில் வெயிலையெல்லாம் மண்டையில் வாங்கிக் கொண்டு நின்றோம்.

"தாராளமா மழை பெஞ்சுதுன்னு வையுங்க, கிருதமால், குண்டாறு, பரலியாறு மூணும் சந்திச்சுத் தண்ணி பெருக்கெடுக்கும். அந்தப் பக்கம் ஷட்டரை அடைத்ததும் இந்தப் பாக்கு வெட்டிப் பாலத்தை மூடிக்கிட்டுத் தண்ணீர் ஓடும். அந்த நேரத்திலே வெளியுலகத்திலேர்ந்து எங்க ஊரே கட் ஆயிடும். ஆழம் தெரியாம மனுஷங்க என்ன, ஒரு சமயம் ஒரு பஸ்ஸே அந்த வெள்ளத்தில அடிச்சிட்டுப் போயிட்டது. இந்த இடத்தில ஒரு பாலம் கட்டணும். அதோ தெரியுது பாருங்க. அந்தத் திசையில் அத்தனை தண்ணியும் ஓடி வீணா கடல்ல கலந்துடும்... 1960,65 ல காமராஜர் காலத்தில கீழவலசையில் ஓர் அணை கட்டத் திட்டம் போட்டு, ஏனோ நின்னு போச்சு. அந்த அணையை மட்டும் கட்டியிருந்தா ஆயிரத்தைந்நூறு ஏக்கர் நஞ்சைக்கும், மூவாயிரம் ஏக்கர் புஞ்சைக்கும் பாசன வசதி கெடைச்சிருக்கும். ம்ம்.... எங்க ஊருக்கு இயற்கையே தண்ணி கொடுத்தாலும் அதைத் தேக்கி வச்சுக்க வசதியில்ல..." — பெருமூச்சு விட்டார்கள் அவர்கள்.

கிளம்புமுன் பேரையூர்க் கண்மாயின் சிதிலமடைந்த ஷட்டர்களையும் பார்வையிட்டோம்.

இந்தப் பக்கங்களிலெல்லாம் இன்னும் எவ்வளவோ செய்யப்பட வேண்டும்!

— சுரேஷ் – பாலா

ஒருத்தரைப் போல் ஒருத்தர் நிறம் இருத்தல் இல்லை.

## பொருத்தமளிக்க உமக்கென்றே 3 வித வண்ணச் சாயல்களில் வருவது லக்மே காலமைன் ஒன்றே.

லக்மே காலமைன் ஒன்றுதான்
மூவித வண்ணச் சாயல்களில்
மோகனமாய் வருகுது:
நேச்சுரல், லைட், கோல்டு, இதில்
உமக்கொன்று சேர்த்தி,
ஒருங்கிணைய நேர்த்தி-எண்ணிலா
வண்ண மேனியரை இனம்பிரித்து
உணருதே லக்மே. இன்மணமுடன்
மேனிமீது இலகுவாய் இழையும்
லக்மே காலமைன் —தனிநிற
உரிமையைத் தருகுது உமக்கு.
பரிட்சார்த்தப் பேக்காகவும்
கிடைக்குது பதம்பார்க்க வசதியாக

**நேச்சுரல்**
—மாநிற
மேனியருக்கு




**லைட்**
—சிகப்பு
மேனியருக்கு




**கோல்டு**
—கருவண்ண
மேனியருக்கு




# லக்மே காலமைன்

சரும வண்ணம் எவ்வண்ணம்
சாயலுண்டு அவ் வண்ணம்.

Tm

# நிழல் யுத்தம்

**பாலகுமாரன்**

## 3

"சொன்னால் யாரும் நம்ப மாட்டா... பேர்ள் ஹார்பர்ல முதல் ஜப்பான் குண்டு விழுந்த போது நான் வத்தக் குழம்பு ஊறின்டிருந்தேன். டிசம்பர் மாசம் ஏழாம் தேதி ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்தி ஒண்ணு... கார்த்தால ஏழு மணி... அம்பத்தஞ்சு நிமிஷம்... தடேர்... தடேர்... தடேர்னு குண்டு வெடிசப்தம்.

"ஞாயிற்றுக்கிழமையும் அதுவுமாக என்ன பீரங்கி ரிகர்ஸல் – இல்லே ஏதாவது கோடவுன் பத்தி வெடிக்கிறதான்னு வெளியே வந்தேன். தலைக்கு மேலே நூத்துக் கணக்கான ஜப்பான் விமானங்கள், மஸ்டர்ட் கலர்ல விமானம். இறக்கைல சிவப்புக் கட்டம் போட்டுச் சர்சர்னு போறது.

"நான் இருக்கிற இடம் உசரம். ஜெனரல் ப்ராடெண்ட் வீடு. பின் அறை எனக்குன்னு ஒழிச்சு விட்டிருந்தான். அவன் சமையல் அறையிலேயே எனக்குன்னு சிலவேளை சமைச்சுப்பேன். வாசல்லே வந்து பார்த்தால் ஹார்பர் தெரியும். ஆட்கள் நடமாடுறது தெரியும்.

யுத்தம் பார்த்திருக்கியா முரளி. வாழ்க்கையில் ஒவ்வொரு மனுஷனும் யுத்தம் பார்க்கணும். கண்ணெதிரிலே எட்டு கப்பல். இரும்புக் கப்பல். ஒண்ணொண்ணும் அரை பர்லாங் நீளம். விமானம் தாங்குகிற கப்பல். டெஸ்ட்ராயர் கப்பல், நாசகாரின்னு விதம் விதமான கப்பல். கண்ணெதிர்க்க அப்பளம் மாதிரி மடிஞ்சு நொறுங்குகிறதைப் பார்த்தேன். குபீர் குபீரென்று இருநூறு அடி உசரத்துக்கு நெருப்பு, வெடி சத்தத்தோட கிளம்பும். இரண்டு மைல் தூரத்துக்கு நிலமெல்லாம் அதிரும். மனுஷர்கள் நூறடி உசரம் எகிறித் தெறிச்சு விழுறதை அன்னிக்குத்தான் பார்த்தேன். இரண்டாயிரம் பேருக்கு மேல் செத்தார்கள். அதுதவிர ஆயிரத்து நூறு பேர் காயம். அரை மணி நேரத்தில் சிதைச்சுச் சிதைச்சு ஒரு ஹார்பரை உடைச்சதைக் கண்ணால் பார்த்தேன். லட்சக்கணக்கில் துப்பாக்கிக் குண்டுகள் சடசடன்னு விமானத்திலி

ருந்து சுட்டுண்டே போறும். "ஜப்பனீஸ், ஜப்பனீஸ்"ன்னு ஒரு நீக்ரோ வேலைக்காரன் கத்திண்டே ஓடிவந்தான். நொச்சுன்னு ஒரு குண்டு அவன் பின் தலையில் விழுந்தது. குப்புற அடிச்சு விழுந்தவன்தான் அவன்! பிறகு அவன் முனகக் கூட இல்லை. பிராணன் போய்விட்டது!

"ஊழித் தாண்டவம். இயற்கைச் சீற்றம்னு என்னென்னவோ சொல்வாளே. மனுஷன் ஊழித் தாண்டவம் ஆடலாம்னு அன்றைக்குத்தான் தெரிஞ்சுது."

"எனக்கு ஒரு கேள்வி..." வாயைப் பிளந்து யுத்த வர்ணனையைக் கேட்டுக் கொண்டிருந்த முரளி முன்பக்கமாய் நகர்ந்தான்.

"நீங்கள் ஏன் அங்கே போய் மாட்டிண்டேள்?"

"எங்கே...?"

"ஹார்பர்ல..."

"ஒரு க்ஷணம் அந்த ஜேம்ஸ், நீக்ரோ சமையல்காரன் செத்துத் தரையில் பரவினப்போ எனக்கும் தோணித்து. அடடா இடம் தெரியாத இடத்துக்கு வந்து மாட்டிண்டுட்டேனு. மாயவரத்துலேர்ந்து பேர்ள் ஹார்பர் வாசல்ல வந்து பிராணன் போகப் போறதான்னு தோணித்து."

"அப்புறம்..."

"கன்னுன்னு ஒரு கோவம். பொட்டை படவா... வார்னு டிக்ளேர் பண்ணாம திடுதிப்புன்னு குண்டு போடறான். இவனை ஒழிக்காமல் விடப்படாதுன்னு தோணித்து. வெல்லத்தில் மொய்க்கிற ஈக்கூட்டத்தை ஈரக் கோணில அடிச்சுக் கொல்ற மாதிரி...! அந்த ஜப்பான் காரனை விடப்படாதுன்னு தோணித்து. என்ன பண்றதுன்னு தெரியலை. திடுதிபுன்னு ஹார்பர் பக்கம் ஓடினேன். அரிஸோனான்னு ஒரு கப்பல் கவிழ்ந்து குப்புற அடிச்சுப் படார்னு வெடிச்சு நானூறு பேர் ஆன் த ஸ்பாட் அவுட். நான் வேலை செய்கிற ஜெனரல் கிட்டே போய் நின்னேன். துக்கம் தாங்கவில்லை. பொங்கிப் பொங்கி அழுது விட்டேன். எனக்கு ஒரு துப்பாக்கி கொடுங்கோ. எனக்கு ஒரு துப்பாக்கி கொடுங்கோன்னு கதறிட்டேன்."

"ஜெனரல் பாடண்ட் யாரு?"

"என்னோட பாஸ். அவருக்குக் கீழ்தான் நான் வேலை செஞ்சேன்."

"என்ன வேலை?"

"பர்ஸனல் அஸிஸ்டெண்ட். பேருதான் அப்படி. சமமா நடத்துவான். சாயந்திரம் உட்கார்ந்து அத்வைதம் கேட்பான். மரணத்துக்கப்புறம் என்னன்னு ஆராய்ச்சி பண்ணுவான். அவனே காக்டெய்ல் கலந்து கொடுப்பான்."

"குடிப்பேளா...?"

"அங்கே போய்ப் பழகிண்டது. அதே சமயம் அந்த ஜெனரல் வேலை நேரத்தில் கண்டிப்பா இருப்பான்."

"எப்படி அவன்கிட்டே போய்ச் சேர்ந்தேள்?"



''அது பெரிய கதை!''

''இரண்டாவது உலக யுத்தம் முழுக்கப் பார்த்தேளா?''

''கண்ணால் பார்த்தேன். ஆபரேஷன் நார்மண்டின்னு ஒரு தாக்குதல் நடந்தது. பிரான்ஸில் கப்பல் மூலமா, பாராசூட் மூலமா 'இன்வேட்' பண்ணினார்கள். அப்பொழுது பிரான்ஸ் ஜெர்மன்கிட்டே இருந்தது. எழுபது கப்பல், லட்சோப லட்சம் ராணுவ வீரர்கள் விடியற்காலையிலே பனிப் போர்வைக்கு நடுவே பிரான்ஸ் கரையைத் தொட்டதுமே... அடேங்கப்பா... என் ஜென்மத்துக்கும் மறக்காது. துரத்தித் துரத்தி அடிச்சா... ஜெர்மன்காரனை... சாவுக்குக் கணக்கே கிடையாது. அப்பத்தான் மீசை முளைச்ச பையன்கள்... இதமா பேசற முப்பது வயசு ஆட்கள். கொஞ்சம் தடலடியா இருக்கிற நாற்பது வயசு அம்பது வயது அதிகாரிகள். இப்ப இருக்கிற அமெரிக்கனைப் பத்தி எனக்குத் தெரியலை. அன்னிக்கு நான் பழகின அமெரிக்கன் ரொம்ப நல்லவன். மனுஷாளை ரொம்பப் பிடிக்கும். படு மரியாதை. நாணயஸ்தன். பொய் சொல்ல மாட்டான். பிடிக்காததைப் பிடிக்கலைன்னு சொல் விடுவான். நல்லதுன்னு கூப்பிட்டுப் பாராட்டுவான்.''

''இந்தியா மேல் உங்களுக்குப் பிடிப்பு இல்லையா?''

''இருந்தது. அந்த யுத்தம் பார்த்துவிட்டு இங்கே வந்து... அடச்சீ... இது ஒரு தேசமான்னு போயிடுத்து.''

''ஏன்...?''

''சாவு தெரியாத தேசம்.''

''புரியலையே...''

''மனுஷா உயிரோட மதிப்பு யுத்தத்துல தெரியும்.''

''யுத்தம் ஓர் ஒற்றுமையைக் கொடுக்கும். மரபை உடைக்கும். மனுஷனைப் புதுசா மாத்தும். நம்ம ஊர் மாறலை. மாற வாய்ப்பு வழி இல்லை. மாறுதத்துக்கு வளர்ச்சி இல்லை. வளராது இருந்து புண்ணியமில்லை. யாருக்கும் உபயோகமில்லை. யுத்தம் உழைப்பைக் கொடுக்கும். ஸ்நேகத்தைக் கொடுக்கும். நெஞ்சுரத்தைக் கொடுக்கும். நமக்கு என்னத்துக்கு வம்புன்னு ஒரு தாசித்தனம் நம்ம ஜனங்கள்கிட்டே இருக்கே... அதை ஒழிக்கணும்... இதுக்கு யுத்தம்தான் உதவி செய்யும்.''

''சாவு பார்த்த பிறகு பயமில்லையா?''

''முதல் சாவு பயமுறுத்தியது. இரண்டாவது பார்த்த சாவு அலற வைச்சுது. மூணு நாலு அஞ்சு... ஆயிரம், இரண்டாயிரம்னு பார்த்தப்போ எந்த மனுஷா வேணா எப்ப வேணுமானாலும் சாகலாம்! எதுவும் நிச்சயமில்லைன்னு ஓர் எண்ணம் வந்துடும். அல்பத்தனம் சுத்தமாப் போயிடும்.''

''ஆச்சரியமா இருக்கு... நீங்க பேசறதைக் கேட்கிறப்ப....''

''பாதிப் பேர் நான் பேசறதைக் காது கொடுத்துக் கேட்கவேயில்லை. என்னவோ அமெரிக்காவில் மேஜை துடைச்சுட்டு இங்கே வந்து பீத்திக்கறான்னு பேசினா...''

''யாரு?''

''நம்மூர்க்காரா... வாஸ்தவம். நான் மேஜை துடைச்சேன். குடிச்சு எடுத்த வாந்தியை வாரினேன். சமையல் பண்ணினேன். டைப் அடிச்சேன், மெஸஞ்சரா போனேன். ஜனாதிபதி ரூஸ்வெல்ட்டோட கைகுலுக்கினேன்.''

''ரூஸ்வெல்ட்டா?''

''கூப்பிட்டு... இந்த முகம் வித்தியாசமா இருக்கே... யாருன்னு கேட்டு விவரம் தெரிஞ்சு அப்படியான்னு ரூஸ்வெல்ட் கைகுலுக்கினார். அமெரிக்காவிலேயே இருந்துடறேளான்னு கூடக் கேட்டான் என்னுடைய ஜெனரல்.''

''ஏன் இருக்கலை?''

''இங்கே நம்ம ஊரும் மாறியிருக்கும்னு நினைச்சேன். தப்புக் கணக்கு போட்டுட்டேன். வந்த பிறகு தெரிஞ்சது எம்டன் போட்ட டார்பிடோ தவிர ஒரு சின்னக் காயம் கூட இந்தியால இல்லைன்னு.''

''எம்டனா?''

''ஆமாம். ஜப்பான் காரன் போட்ட குண்டு. அவா கப்பல் பேரு எம்டன். மெரீனா வாசல்ல இருக்கே யூனிவர்ஸிடி பரீட்சை ஹால்ல சுவரைக் கல்வச்சிருக்காளே பார்த்ததில்லை...?''

''இல்லையே.''

''இரண்டு குண்டுகள் போட்டான். ஒன்று கரையிலேயே வெடிச்சது. இன்னொண்ணு பரீட்சை ஹால் சுவரில் இடிச்சது.''

''அப்புறம்?''

''திரும்பிப் போய்விட்டான்!''

''அவ்வளவுதானே?''

''இங்கே அவ்வளவுதான்.''

''நீங்க ஏன் திரும்பி அமெரிக்கா போகலை?''

''இரண்டு தடவை போயிட்டு வந்தேன்!''

''அப்புறம்?''

''அவளுக்கு அமெரிக்கா பிடிக்கலை. கல்யாணம் இங்கே பண்ணிண்டது தப்பு. அவளுக்கு மாயவரம்தான் உலகம்.''

''இங்கே வந்துதான் கல்யாணமா?''

''நாப்பத்தியாறுல கல்யாணம். நாற்பத்தியேழுல லலிதா பொறந்தாள்.''

''அற்புதமா இங்கிலீஷ் பேசறா மாமா.''

''என் ட்ரெயினிங்!''

''பியானோ யார் கற்றுக் கொடுத்தா? நீங்களா?''

''இல்லை. இங்கே டீச்சர் வச்சு கான்ஸலேட் ஜெனரல்ல கோச் பண்ணினா. கத்துண்டா.''

''மாமி எப்படித் தவறிப் போனா?''

''நோஞ்சான். கன்னுபின்னுன்னு விரதம், பூஜைன்னு உடம்பைக் கெடுத்துண்டு, எண்ணி, பத்து வருஷங்களிலே போயிட்டா.''

''அதுக்கப்புறம் அமெரிக்கா போயிருக்கலாமே?''

''குழந்தை ரெண்டுங்கெட்டானா போயி

## அருள்வாக்கு



ஸினிமா, ட்ராமாவிலே பல வேஷங்களில் ஒரு நடிகன் வருகிறான். ஒன்றில் அவன் ராமனாக வரலாம். இன்னொன்றில் ராவணனாக வரலாம். ஒன்றில் பணக்காரனாகவும் இன்னொன்றில் தரித்திரனாகவும் வரலாம். இப்படி வேஷம் மாறுகிறதென்றாலும் வேஷம் போட்டுக் கொண்ட ஆசாமி ஒருத்தன்தான். அப்படியே நம்முடைய வாழ்க்கை நாடகத்தில் நாம் போட்டுக் கொள்ளும் பல வேஷங்களில் ஒரு வேஷமாக இல்லாமல், இத்தனை வேஷமும் போட்டுக் கொள்கிற அந்த ஒரு நிஜ ஆசாமியாக இருப்பது ஆத்மாதான். வேஷங்கள் பல இருக்கின்றன என்பதாலேயே வேஷமாயில்லாத ஒரு நிஜ ஆசாமியும் இருப்பதால்தான் இந்த வேஷங்கள் அவனுக்கு ஏற்பட முடிகிறது என்று ஆகிவிடுகிறது.

வேஷத்தைக் கலைத்துவிட்டு, அந்த ட்ரெஸ், மேக் அப் எல்லாவற்றையும் எடுத்துவிட்டு ஆசாமி தன் வீட்டில் இருக்கிறாற்போல், ஆத்மாவானது மனஸ், உடம்பு முதலிய உடுப்பும் ஹரிதாரமும் இல்லாமல் ஸுஷுப்தியிலும் (தூக்கத்திலும்) நிஷ்டையிலும் இருக்கிறது. அப்போது உடம்போடு, மனஸோடு பட்டுக் கொள்ளாமல், தனியாயிருப்பதனால் ஒரே சாந்தமாய் இருக்கிறது. ஒரு கார்யமும் எண்ணமுமில்லாமல், இவற்றால் ஏற்படும் இழுபறிப் போராட்டம், அதாவது தேவாஸுர யுத்தம் இல்லாமல் ஜீவன் இருப்பது அப்போதுதான். ஆசையும், அதனால் ஏற்படும் அவஸ்தையுமில்லாமல் ஜீவன் இருப்பது மனஸின் ஆட்டமில்லாமல் ஆத்மா மட்டும் இருந்து கொண்டிருக்கும் நிலையிலேதான். ப்ரசாந்த நிலை என்கிற உசந்த அமைதி நிலை அதுதான்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய ஸுவாமிகள்.

டுவா. ஸிடிஸென்ஷிப் ரெண்டு பேருக்குமே ப்ராப்ளம் வரும்.''

''இங்கேயே இருந்துட்டேள்.''

''ஆமாம்.''

''கிட்டத்தட்ட அமெரிக்கன் லைஃப்.''

''யெஸ். கிட்டத்தட்ட அப்படித்தான்.''

''அவர்களுக்கு ஆம்பளை பொம்பளை வித்தியாசம் கொஞ்சம் கம்மியோ.''

''இல்லை, முரளி. அப்படித் தோன்றுகிறது. ஒழுக்கம் எல்லா தேசத்துலேயும் பொது. கள்ளத்தனம் எங்கேயும் தவறு. அவர்கள் வாழ்க்கையைச் சுலபமாக்கிக் கொண்டார்கள். எல்லாரும் சமமா நன்னா இருக்கணும்னு முயற்சி பண்ணுகிறவர்கள்!''

''இன்னும் கூட இந்தியாவிலே நீங்க ஒட்டலையா?''

''முடியலை.''

''ஏன்?''

''இந்தத் தேசத்து ஃபிலாஸஃபி தவிர இந்து மதத் தத்துவம் தவிர மத்ததெல்லாம் போலி. தத்துவம் தொலைச்சோம். மதம் பெரிசாச்சு. வாழ்க்கை அழிஞ்சு போச்சு.''

''உங்களோட நிறையப் பேசணும் போல இருக்கே.''

''ஒருநாள் வீட்டுக்கு வாயேன். அம்மாவைக் கூட்டிண்டு.''

''அம்மாவுக்கு இதெல்லாம் புரியுமான்னு தெரியலை.''

'' எது...?''

''பியானோ... லலிதா இங்கிலீஷ். உங்க வீட்டு ஹால்., உங்க பேச்சு... எல்லாம் புதிரா இருக்கும்.''

''நான் கெட்டவனில்லை, முரளி.''

''புரியறது மாமா. இல்லேன்னா இத்தனை வெளிப்படையாகப் பேசுவேளா?''

''எதைச் சொல்றே?''

''நான் உனக்கு வேலை வாங்கிக் கொடுத்தது வெறும் உதவி இல்லை. பதிலுக்கு எதிர்பார்க்கறேன்னு பட்டுன்னு சொல்வேளா?''

''நான் சொன்னது தப்பா?''

''தப்பில்லை. அம்மாவுக்கு ஒத்து வருமா?''

''வரட்டும். வந்து பார்க்கட்டும்.''

''இன்னொரு கேள்வி.''

''கேளு.''

''என்னை ஏன் செலக்ட் பண்ணினேன்?''

''எதுக்கு?''

''வேலைக்கு. உங்க பொண்ணுக்கு.''

''நீ நல்லவன் முரளி.''

'' அதனால்...?''

''அது மட்டுமில்லை. எனக்கு நாலு சகோதரிகள். ஊர் விட்டுப் போறச்சே அத்தனை பேருக்கும் கல்யாணம் ஆயிடுத்து. அந்த நாலு பேர் வாழ்க்கையையும் வந்து பார்த்தேன். நாலு மாப்பிள்ளைகளும் எங்க வீட்டுப் பெண்களை அடிச்சு உதைச்சு நாசம் பண்ணி, அடிமையா வச்சிண்டிருக்கிறதைப் பார்த்தேன்.''

''ஐயோ...''

''வேண்டாம் முரளி. அந்தக் கதை வேண்டாம்.''

''ஏன் மாமா அவ்வளவு மோசமா...?''

அந்த மனிதர் இடது கையால் கண்களைப் பொத்திக் கொண்டு நாற்காலியில் முகம் கவிழ உட்கார்ந்திருந்தார். முரளிக்கு அவரைப் பிடித்துப் போயிற்று. அந்தக் கவலையில் உண்மை இருந்தது.

(தொடரும்)

# ஏழே முக்காலுக்கு இசை நிகழ்ச்சி!
















...புவெரு ஸில்க்ஸுக்கு உன் அப்பாவே முழு சொந்தக்காரர் ஆனார்... வியாபாரம் ஜோரா... எக்கச்சக்கப் பணம்... சோமையாவுக்குப் பொறுமை... அப்படித்தானே?
ஆமா ஸார்! ஒரு நாள்...


ஒரு நாள்?
அப்பாவைச் சோமையா ஃபோனில் மிரட்டினார். யதேச்சையா அதை நான் மாடி எக்ஸ்டென்ஷனில கேட்டேன்...


கருப்பசாமி! எனக்குத் துரோகம் பண்ணிட்டு நீ பிஸினஸ்ல அள்ளிக்குவிக்கிறே! டேய்! உன் வம்சத்தைப் பூண்டோடு அழிக்கிறேன், பார்!


அப்பா அதை ஸீரியஸ்ஸா எடுத்துக்கலை. அடிபட்ட நாய் குரைக்கும்னு அலட்சியப்படுத்தினார்.


ஐ ஸீ... சோமையா இப்போ எங்கே? என்ன வயசு?


கடலூர் பக்கத்திலே ஒரு கிராமம். விவசாயம் பண்றதாகக் கேள்வி. கிட்டத்தட்ட அப்பா வயசு தான். ஐம்பது...


புவனு! வீட்டிலே இருக்கும் போது வழக்கமா என்ன செய்வே? குறிப்பா சாயந்திர நேரத்தில் விவரமாச் சொல்லு. பிறகு இயல்பா இரு. மற்றதை நான் கவனிச்சுக்கறேன்....


புவனுவின் காதலன் பாஸ்கர் வந்தான். அறிமுகம் ஆனதும்....
நான் கூட காக்கி சட்டை போட ஆசைப் பட்டேன். செலக்ஷன் ஆகலை....
நல்லதாப்போச்சு! சேல்ஸ் மானேஜரா என்னை விடப் பல மடங்கு சம்பாதிக்கிறாங்க!


புவனு கடிகாரத்தைப் பார்த்தாள். டிரான்ஸிஸ்டரை எடுத்தாள்.
ஏழு முக்காலுக்கு ஒரு அருமையான இசை நிகழ்ச்சி....
ஏழு முக் கால்-இசை நிகழ்ச்சி; ஏழு முக்கா லுக்குக் கொலை! ஆ!


புவனு டிரான்ஸிஸ்டரை ஆன் செய்த அதே கணம், திவாரி அதைத் தட்டி விட....
டமால்


அதிர்ச்சி அடங்கியதும்....
நல்ல காலம்! டிரான்ஸிஸ்டர் குண்டிலிருந்து புவனுவைக் காப்பாத்தினீங்க.... ஆனா அவளுக்கு விரோதி யார்?
அவளுடைய அன்றாடப் பழக்கங்களை நன்கு அறிந்த ஒருவன்தான்!


பைபை... நான் இன்னிக்குத் திருச்சிக்குப் போகணும். கிளம்பட்டுமா?
என்ன பாஸ்கர், புவனாவுடன் கொஞ்ச நேரம் இருந்து ஆறுதல் சொல்லிட்டுப் போங்க!


பஸ்ஸுக்கு லேட் ஆயிடுமே? ஸாரி, இன்ஸ்பெக்டர்! ஸோ ஸாரி! என்ன செய்ய, என் ஸேல்ஸ்மன் உத்யோகம் அப்படி!


பாஸ்கர் வாசல் கதவு நோக்கி நடக்க... திவாகர் மனத்தில் மின்னல்
'ஸாரி இன்ஸ்பெக்டர்! ஸோ ஸாரி!' — போனில் ஒலித்த அதே வார்த்தைகள்! அதே குரல்!


பாய்ந்து சென்று பாஸ்கரைப் பற்றிய திவாகர், தம் கைவரிசையைக் காட்ட....
ஐயோ! அவரை ஏன் அடிக்கறாங்க?
டேய்! யார் நீ? உண்மையைச் சொல்!


நான் சோமையாவின் மகன். அப்பா என்னைத் தூண்டி விட்டார். புவனாவைக் காதலிப்பதாய் நடித்து நெருங்கி, அந்த நெருக்கத்தை வெடிகுண்டு வைக்கப் பயன்படுத்திக்கிட்டேன்... ஸாரி, புவனா! ஸோ ஸாரி!

# பொன்னியின்

## அத்தியாயம் 34

## லதா மண்டபம்



அடர்ந்த மாந்தோப்புக்கிடையே சென்ற ஒற்றையடிப் பாதையின் வழியாக அம்மங்கை. விடுவிடு வென்று நடந்து செல்ல, வந்தியத்தேவனும் விரைவாகத் தொடர்ந்து சென்றான். மரஞ்செடிகளின் மீது மோதிக் கொள்ளாமல் அந்த இருளில் நடந்து செல்வது கஷ்டமாகத்தான் இருந்தது. ஒருசமயம் இவன் மரத்தில் மோதிக் கொள்ளப் பார்த்துத் தயங்கி நின்றபோது, அந்த மங்கை திரும்பிப் பார்த்து, "ஏன் நிற்கிறாய்? வழி மறந்து போய் விட்டதா? நீதான் இருட்டில் கண் தெரிகிற மனிதன் ஆயிற்றே!" என்றாள். அதற்குப் பதிலாக வந்தியத்தேவன் உதட்டில் விரலை வைத்து முன்னால் அவள் சொன்னதுபோல் "உஷ்!" என்றான். அதே நேரத்தில் மதில் சுவருக்கு வெளியே ஏதோ சப்தம் கேட்டது. மனித நடமாட்டம் போலத் தொனித்தது. பிறகு இருவரும் மறுபடி நடந்தார்கள். கொஞ்ச தூரம் போனதும் வல்லவரையன் இலேசாகச் சிரித்தான். அந்த மங்கை திரும்பிப் பார்த்து, "என்னத்தைக் கண்டு சிரிக்கிறாய்?" என்றாள்.

"கண்டு சிரிக்கவில்லை; கேட்டுச் சிரிக்கிறேன்!" என்றான்.

"அப்படியென்றால்.....?"

"என்னைத் தேடி வந்தவர்களின் காலடிச் சத்தத்தைச் சற்று முன் நீ கேட்கவில்லையா? அவர்கள் ஏமாந்து போனதை எண்ணிச் சிரிக்கிறேன்!"

அவள் சிறிது பயத்துடன், "உன்னை யாராவது தேடி வருகிறார்களா, என்ன? எதற்காக?" என்றாள்.

"இல்லாவிட்டால் எதற்காக இந்தக் குருட்டு இருட்டில் மதில் சுவரில் வந்து மோதிக் கொண்டு உட்கார்ந்திருக்க வேண்டும்?"

அச்சமயம் காற்றின் அசைவில் மரக் கிளைகள்

# செல்வன்

கொண்டே நடந்தான்.

தான் சந்திக்கப் போகிறது யாரை? பழுவூர் இளையராணியாயிருக்கலாம். அல்லது மதுராந்தகத் தேவரை மணந்து கொண்ட சின்னப் பழுவேட்டரையரின் மகளாயிருக்கலாம். தன்னை மந்திரவாதியென்று எண்ணி அந்தப் பெண் அழைத்துக் கொண்டு போகிறாள். போய், அந்த இளையராணி யாராயிருந்தாலும், அவளைச் சந்திக்கும்போது எப்படி நடந்து கொள்வது?— நெஞ்சே! தைரியத்தைக் கைவிடாதே! தைரியம் உள்ள வரையில் ஜயமும் உண்டு! சமயத்தில் ஏதேனும் யுக்தி தோன்றாமல் போகாது! இதுவரையில் எந்த நெருக்கடியிலும் நாம் தோல்வியுற்று வந்ததில்லை. அதிலும் பெண் பிள்ளை ஒருத்தியிடமா தோல்வியடையப் போகிறோம்?



ரு பெரிய மாளிகையை அவர்கள் நெருங்கிச் சென்றார்கள். ஆனால் மாளிகையின் முன்வாசலை நோக்கிச் செல்லவில்லை. பின்புற வாசலையும் நெருங்கவில்லை. மாளிகையின் ஒரு பக்கத்தில் தோட்டத்துக்குள் நீட்டி விட்டிருந்த சிருங்கார லதா மண்டபத்தை நெருங்கினார்கள். இன்னும் அருகில் நெருங்கியபோது அந்த லதா மண்டபம் இரண்டு பெரிய பிரம்மாண்டமான மாளிகைகளை ஒன்று சேர்க்கும் பாதையைப் போல், அமைந்திருந்தது. அப்படிச் சேர்க்கப்பட்ட இரு கட்டடங்களும் ஒரு விதத்தில் மாறுபட்டிருந்தன. வலது புறத்து மாளிகை அதன் உள்ளே சுடர் விட்டு எரிந்த பல தீபங்களினால் ஜொலித்துக் கொண்டிருந்தது. உள்ளிருந்து பல வித கலகலப்பான தொனிகள் வந்து

விலகி நிலாக் கதிர் ஒன்று வந்தியத்தேவனுடையமுகத்தின்மீதுவிழுந்தது.

அந்தப் பெண் சற்று வியப்புடனும் திகைப்புடனும் அவனைப் பார்த்தாள்.

"என்ன பார்க்கிறாய்?" என்று கேட்டான்.

"நீ, நீதானா என்று பார்த்தேன்!"

"நான், நான் இல்லாவிட்டால் வேறு யாராயிருப்பேன்?"

"போன தடவை நீ வந்திருந்த போது பெரிய மீசை வைத்திருந்தாயே!"

"நல்ல கேள்வி கேட்கிறாய்? என்னைப் போல் சுவர் ஏறிக் குதித்து வருகிறவன் அடிக்கடி வேஷத்தை மாற்றிக் கொள்ளாவிட்டால் எப்படி?"

"முன்னைக்கு இப்போது இளமையாய்த் தோன்றுகிறாயே!"

"உற்சாகம் இருக்கும்போது இளமை தானே வருகிறது!"

"அப்படி உனக்கு என்ன உற்சாகம் வந்தது?"

"உங்கள் மகாராணியின் தயவு இருக்கும்போதுஉற்சாகத்துக்குஎன்ன குறைவு?"

"பரிகாசம் செய்ய வேண்டாம். இன்றைக்கு எங்கள் எஜமானி இளைய ராணிதான். ஒருநாள் நிச்சயமாக மகாராணி ஆவார்கள்!"

"அதைத்தான் நானும் சொல்லுகிறேன்."

"இதுதானா சொல்லுவாய்? உன்னுடைய மந்திர சக்தியினால்தான் மகாராணி ஆனார்கள் என்று கூடச் சொல்லுவாய்! பாதி ராஜ்யத்தைக் கொடு என்றுகேட்டாலும்கேட்பாய்!"

வந்தியத்தேவன் அறிய விரும்பியதை ஒருவாறு அறிந்து கொண்டான். பிறகு அவன் ஒன்றும் பேசவில்லை. தீவிரமாக யோசித்துக்

அமரர் கல்கி



கொண்டிருந்தன. இடது புறத்துக் கட்டடத்திலோ ஒரு சின்னஞ் சிறு தீபம் கூட எரியவில்லை. நிலா வெளிச்சத்தில் அதன் வெளிச் சுவர்கள் நெடிதுயர்ந்து தெரிந்தன. ஆனால் அந்த மாளிகையின் உள்ளே நிசப்தமும் இருளும் குடிகொண்டிருந்தன.

வந்தியத்தேவனை அழைத்துக் கொண்டு வந்த பெண், லதா மண்டபத்தை அணுகியதும் அவனைப் பார்த்து சமிக்ஞையினால் அங்கேயே நிற்கும்படி சொன்னாள். அவனும் அப்படியே நின்றான். அவ்விதம் நின்ற போதுதான் அந்த இடத்தில் நிறைந்திருந்த மலர்களின் நறுமணத்தை அவன் உணர்ந்தான். அப்பப்பா! என்ன வாசம்! என்ன வாசம்! மூக்கில் நெடி போல ஏறித் தலையைக் கிறுகிறுக்க அடிக்கிறதே!

அந்தப் பெண் லதா மண்டபத்துக்குள் நுழைந்ததும், அவளுடைய குரலும் இன்னொரு இனிய பெண் குரலும் கேட்டன. ''வரச் சொல், உடனே! கேட்பானேன்? நான்தான் இத்தனை நேரமாய்க் காத்திருக்கிறேன் என்று தெரியுமே?'' என்ற சொற்கள் அவனுக்கு மயக்கத்தை உண்டாக்கின. அந்தக் குரல் பழுவூர் இளையராணியின் குரல்தான்! சந்தேகமில்லை! அடுத்த கணம் அவள் முன்னால் போய் நிற்கப் போகிறோம். அந்த நிலைமையை எவ்விதம் சமாளிக்கப் போகிறோம்? எதிர்பார்த்த மந்திரவாதிக்குப் பதிலாகப் பல்லக்கில வந்து மோதிய மனிதன் வந்து நிற்பதைக் கண்டு அவள் என்ன நினைப்பாள்? ஆச்சரியப் படுவாளா? கோபம் கொள்வாளா? ஒருவேளை மகிழ்ச்சி அடைவாளா....? அல்லது எந்தவித உணர்ச்சியையும் வெளியில் காட்டாமல் நடந்து கொள்வாளா?

அவனை அழைத்து வந்த மங்கை லதா மண்டபத்து வாசலில் நின்றபடி சமிக்ஞையால் அழைத்தாள்.

வந்தியத்தேவன் அவள் நின்ற இடத்தை அடைந்து மண்டபத்தின் உட்புறம் நோக்கினான். ஒரு நொடிப் பொழுதில் அங்கே தோன்றிய காட்சி அவன் கண் வழியாக மனத்தில் பதிந்தது. தங்க விளக்கு ஸ்தம்பத்தில் ஒளிர்ந்த தீபச் சுடர் பொன் ஒளியைப் பரப்பியது. ஏதோ ஓர் அபூர்வமான வாசனைத் தைலத்தை அந்த விளக்கில் விட்டிருக்க வேண்டும். ஆதலின் தீபச் சுடரின் புகை கமகமவென்று மணம் வீசிற்று. பல வர்ண நறுமண மலர்களைப் பரப்பிய சப்ரகூட மஞ்சத்தில் ஒரு பெண் ஒய்யாரமாகச் சாய்ந்து கொண்டு வீற்றிருந்தாள். அவள் பழுவூர் இளைய ராணிதான். பகலில் பல்லக்கில் பார்த்தபோது அவள் அழகியாகத் தோன்றினாள். இரவில் தங்கக் குத்து விளக்கின் வெளிச்சத்தில் அழகென்னும் தெய்வமே உருவெடுத்தது போலக் காணப்பட்டாள். மலரின் மணமும் விளக்கின் புகை மணமும் பழுவூர் இளைய ராணியின் மோகன உருவமும் சேர்ந்து வந்தியத்தேவனைப் போதை கொள்ளச் செய்தன.

வந்தியத்தேவா! ஜாக்கிரதை! ஒரே ஒரு தடவை நீ மது பானம் செய்தாய்! உன் அறிவு கலங்குவதை அறிந்தாய்! பிறகு மதுவைத் தொடுவதில்லை என்று சபதம் செய்தாய்! இப்போது அதை ஞாபகப்படுத்திக் கொள்! மதுவின் போதையைக்காட்டிலும்சக்திவாய்ந்த இந்த மயக்கத்தில் உன் அறிவைப் பறி கொடுத்துவிடாதே!

வந்தியத் தேவனைப் பார்த்தபழுவூர் இளைய ராணி நந்தினி அவளுடைய பவழ இதழ்கள் சிறிது விரிந்து முத்துப் பற்களை வெளிக் காட்டும்படி வியப்புடன் நோக்கிக் கொண்டிருந்தாள். பேச முடியாத நிலையை அவன் அச்சமயம் அடைந்திருந்தது வந்தியத்தேவனுக்கு அனுகூலமாகப் போயிற்று.

இலேசாக அவன் ஒரு சிரிப்புச் சிரித்துவிட்டு, ''அம்மணி! தங்கள் தாதிப் பெண்ணுக்குத் திடீரென்று சந்தேகம் வந்துவிட்டது;— நான் மந்திரவாதியா இல்லையா என்று! அதை எப்படிக் கேட்டாள் என்று நினைக்கிறீர்கள்? 'நீ, நீதானா?' என்று கேட்டாள்!'' என்று சொல்லி மறுபடியும் சிரித்தான்.

நந்தினி புன்னகை புரிந்தாள். வந்தியத் தேவனுடைய கண் முன்னால் ஒரு மின்னல் மின்னியது! அது தேனைச் சொரிந்தது.

''இவளுக்கு அப்படித்தான் ஏதாவது சந்தேகம் திடீர் திடீர் என்று வந்துவிடும்! வாஸுகி! ஏன் இங்கேயே மரம்போல நிற்கிறாய்? உன் இடத்துக்குப் போ! யாராவது வரும் காலடிச் சத்தம் கேட்டால் கதவைப் படீரென்று சாத்து!'' என்றாள் நந்தினி.

''இதோ அம்மா!'' என்று சொல்லிவிட்டு, வாஸுகி லதா மண்டபத்தின் உள்வழியாகப் பிரகாச மாளிகைக்குச் சென்ற நடைபாதையில் நடந்து போய்ச் சற்றுத் தூரத்தில் மங்கலாகத் தெரிந்த வாசற்படியண்டை உட்கார்ந்து கொண்டாள்.

நந்தினி சிறிது குரலைத் தாழ்த்திக் கொண்டு, ''உன்னை மந்திரவாதியில்லையென்று இவள் சந்தேகித்தாள்? அசட்டுப் பெண்! மந்திரவாதிகள் என்று சொல்லிக் கொள்கிறவர்களில் முக்கால் வாசிப் பேர் வெறும் பொய்யர்கள். நீதான் உண்மை மந்திரவாதி! என்ன மாயமந்திரம் செய்து இந்தச் சமயத்தில் இங்கே வந்தாய்?'' என்று கேட்டாள்.

''அம்மணி! மாய மந்திரம் செய்து நான் இங்கு வரவில்லை. சுவர் மீது சாத்தியிருந்த ஏணி மேல் ஏறித்தான் வந்தேன்!'' என்றான் வந்தியத் தேவன்.

''அதுதான் தெரிகிறதே! இந்தப் பெண்ணை என்ன மாயமந்திரம் செய்து ஏமாற்றினாய் என்று கேட்டேன்.''

''நிலா வெளிச்சத்தில் ஒரு புன்னகை புரிந்தேன். அவ்வளவுதான்! அதற்குச் சரிப்பட்டு வராவிட்டால், தாங்கள் கொடுத்த மந்திர மோதிரத்தைக் காட்ட எண்ணியிருந்தேன்.''

''அதைப் பத்திரமாய் வைத்திருக்கிறாய் அல்லவா? அந்த மோதிரம் இருக்கும்போது பட்டப் பகலில் பகிரங்கமாக இங்கே வந்திருக்கலாமே? எதற்காக இந்தக் குருட்டு வழியில் திருட்டுத்தனமாக வந்தாய்?''

''அம்மணி! தங்கள் மைத்துனர் இருக்கிறாரே, சின்னப் பழுவேட்டரையர், அவருடைய ஆட்கள் சுத்தத் திருடர்கள். முதலில் என்னுடைய உடைகளையும் உடைமைகளையும் திருடப் பார்த்தார்கள். பிறகு என்னைப் பின் தொடர்ந்து ஒரு கணம் கூடப் பிரியாமல் வந்து கொண்டிருந்தார்கள். அவர்களிடமிருந்து பிரியப் பட்ட பாடு பெரும் பாடாகப் போயிற்று. பிரிந்த பிறகு சந்து பொந்துகளில் புகுந்து தங்களுடைய மாளிகை மதில் சுவரைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தேன். அந்தச் சமயத்தில் சுவர் மேல் வைத்த ஏணியைப் பார்த்ததும் தாங்கள்தான் இந்த ஏழையை நினைவு கூர்ந்து இந்த ஏற்பாடு செய்திருக்கிறீர்கள் என்று எண்ணிவிட்டேன். அது தவறு என்று தெரிந்து கொண்டேன். மன்னிக்க வேண்டும்.''

''மன்னிப்பதற்கு அவசியம் ஒன்றும் ஏற்படவில்லையே!''

''அது எப்படி, அம்மணி!''

''நீ நினைத்தது அவ்வளவாகத் தவறும் இல்லை. மந்திரவாதியை எதற்காக நான் தருவிக்க நினைத்தேன். தெரியுமா?''

''தெரியவில்லை, அம்மணி! எனக்கு மந்திரமும் தெரியாது; ஜோசியமும் தெரியாது!''

''உன்னை நேற்றுக் காலையில் பார்த்தது முதல் உன்னுடைய ஞாபகமாகவே இருந்தது. நீ ஏன் இன்னும் என்னைப்




பார்க்க வரவில்லையென்று தெரிந்து கொள்ள விரும்பினேன். அதற்காகவேதான் நான் மந்திரவாதியைக் கூப்பிட்டனுப்பினேன்.''

''மிக்க ஆச்சரியமாயிருக்கிறது.''

''எது?''

''இப்போது நீங்கள் சொன்னது தான். நேற்று உங்களைப் பார்த்தது முதல் எனக்கும் உங்கள் ஞாபகமாகவே இருந்தது!''

''பூர்வ ஜன்ம வாசனையில் உனக்கு நம்பிக்கை உண்டா?''

''அப்படியென்றால்.....?''

''பூர்வ ஜன்மத்தில் இரண்டு பேருக்கு நட்போ, உறவோ இருந்தால், இந்த ஜன்மத்திலும் அத்தகைய சொந்தம் ஏற்படும் என்கிறார்களே, அதைத்தான் சொல்லுகிறேன்.''

''நேற்றுவரையில் எனக்கு அந்த நம்பிக்கை இல்லை. நேற்றுத்தான் அதில் நம்பிக்கை பிறந்தது.''

இவ்விதம் வந்தியத்தேவன் கூறிய போது வெளிப்படையாகப் பொய் சொன்னான் என்றாலும், மனத்திற்குள் குடந்தை ஜோதிடர் வீட்டில் பார்த்த பெண்ணை நினைத்துக் கொண்டுதான் சொன்னான். ஆனால் நந்தினிக்கு அதைப் பற்றிய விவரமே தெரிய இடமில்லையல்லவா? தன்னைப் பற்றிச் சொல்வதாகவே நினைத்துக் கொண்டாள்.

''ஆனால் அதற்காக நீ என்னைப் பார்க்க வரவில்லையே? ஏதோ ஆழ்வார்க்கடியார் நம்பி என்பவர் செய்தி சொல்லி அனுப்பியதாக....''

''ஆம், அம்மணி! அவர் சொல்லி அனுப்பிய செய்தியைத் தங்களிடம் சொல்வதற்காகவே முதலில் தங்களைப் பார்க்க விரும்பினேன். தங்களை ஒருமுறை பார்த்தபிறகு, பழைய காரணமெல்லாம் மறந்து போய் விட்டது.''

''ஆழ்வார்க்கடியாரை நீ எங்கே பார்த்தாய்? என்ன செய்தி சொல்லியனுப்பினார்?''



"வீர நாராயணபுரத்துக்கு அருகில் ஆழ்வார்க்கடியார் நம்பியைச் சந்தித்தேன். அவர் தன் கைத்தடியின் சக்தியைக்கொண்டு விஷ்ணு தான் பெரியதெய்வம்என்றுமெய்ப்பிக்கமுயன்றார். அச்சமயத்தில் பெரிய பழுவேட்டரையரின் பரிவாரங்கள் வந்தன. அவரைத் தொடர்ந்து தங்கள் பல்லக்கும் வந்தது. அங்கே என்ன ரகளை என்று பார்ப்பதற்காகவோ என்னமோ, தங்களுடைய ஒரு பொற்கரம் பல்லக்கின் திரையை விலக்கிற்று. அப்போதுதான் தாங்கள் என்று தெரிந்து கொண்டு ஆழ்வார்க்கடியார் தங்களுக்கு ஒரு செய்தி அனுப்ப விரும்பினார். நானும் அன்றிரவு கடம்பூர் சம்புவரையர் மாளிகையில் தங்கியபடியால் என்னிடம் செய்தி சொல்லி அனுப்பினார். ஆனால் கடம்பூரில் தங்களை நான் பார்க்க முடியவில்லை. தஞ்சாவூர்க் கோட்டைக்கருகில் சாலையில்தான் சந்திக்க முடிந்தது. அதுவும் தங்கள் பல்லக்கு என் குதிரை மேல் மோதியதினால்தான்!"

இவ்விதம் வந்தியத்தேவன் சொல்லி வந்தபோது நந்தினி மேலே அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்தாள். ஆகையால் அவளுடைய முக பாவத்திலிருந்து ஒன்றும் கண்டு பிடிக்க முடியவில்லை. கடைசியில் வந்தியத்தேவன் சொன்னதைக் கேட்டதும் அவனைத் திரும்பிப் பார்த்து ஒரு

மோகனப் புன்னகை புரிந்தாள். "ஆமாம். நான் ஏறும் பல்லக்கு வெகு பொல்லாத பல்லக்குதான்!" என்றாள்.

# அத்தியாயம் 35

# மந்திரவாதி

தூரத்தில் பேரிகைகளின் பெரு முழக்கம் கேட்டது. எக்காளங்கள் சப்தித்தன. மனிதர்களின் குரல்கள் ஜயகோஷம் செய்தன. கோட்டைக் கதவுகள் திறந்து மூடிக்கொள்ளும் சத்தமும், யானைகள் குதிரைகளின் காலடிச் சத்தமும் எழுந்தன.

நந்தினியின் கவனத்தை அந்தச் சத்தங்கள் கவர்ந்தன என்பதை வந்தியத்தேவன் அறிந்து கொண்டான். காவல் புரிந்த தாதிப் பெண் திடுக்கிட்டு எழுந்து சற்று அருகில் வந்து, "அம்மா! எஜமான் வந்துவிட்டார் போலிருக்கிறது!" என்றாள்.

நந்தினி, "எனக்குத் தெரியும்! நீ உன் இடத்துக்குப் போ!" என்றாள்.

பிறகு வந்தியத்தேவனைப் பார்த்து, "தனாதிகாரி கோட்டையில் பிரவேசிக்கிறார். சக்கரவர்த்தியின் க்ஷேமத்தை விசாரித்துவிட்டு, கோட்டை தளபதியைப் பார்த்துப் பேசிவிட்டு, இங்கே வருவார். வருவதற்குள் நீ போய்விட வேண்டும். ஆழ்வார்க்கடியார் கூறிய செய்தி என்ன?" என்று வினவினாள்.

"அம்மணி! அந்த வீர வைஷ்ணவ சிகாமணி தங்களை அவருடைய சகோதரி என்று சொல்லிக் கொண்டார். அது உண்மைதானா?" என்று வல்லவரையன் கேட்டான்.

"அதைப் பற்றி நீ ஏன் சந்தேகப்படுகிறாய்?"

"பச்சைக் கிளியும் கடுவன் குரங்கும் ஒரு தாயின் குழந்தைகள் என்றால் எளிதில் நம்ப முடியுமா?"

நந்தினி சிரித்துவிட்டு, "ஒரு விதத்தில் அவர் சொன்னது உண்மைதான். நாங்கள் ஒரே வீட்டில், ஒரே குடும்பத்தில் வளர்ந்தோம். உடன் பிறந்த தங்கையைப் போலவே என்னிடம் பிரியம் வைத்திருந்தார். பாவம்! அவருக்குப் பெரும் ஏமாற்றம் அளித்து விட்டேன்!"

"அப்படியானால் சரி! ஆழ்வார்க்கடியார் தங்களுக்குச் சொல்லி அனுப்பிய செய்தி கிருஷ்ண பகவான் தங்களுக்காகக் காத்துக்கொண்டிருக்கிறார் என்பதுதான். தாங்கள் கண்ணனை மணந்து கொள்ளும் கலியாணக் காட்சியைப் பார்க்க வீர வைஷ்ணவ பக்த கோடிகளும் காத்துக் கொண்டிருக்கிறார்களாம்!"

நந்தினி ஒரு பெருமூச்சு விட்டாள். "ஆகா! இன்னும் அவருக்கு அந்தச் சபலம் நீங்கவில்லை போலிருக்கிறது. நீ அவரைப் பார்த்தால் எனக்காக இதைச் சொல்லிவிடு. என்னை அடியோடு மறந்துவிடச் சொல்லு! ஆண்டாளைப் போல் பரம பக்தையாகக் கொஞ்சமும் தகுதியற்றவள் நான் என்று சொல்லு!"

"நான் அதை ஒப்புக் கொள்ளவில்லை அம்மா!"

"என்னத்தை ஒப்புக் கொள்ளவில்லை?"

"தாங்கள் ஆண்டாள் ஆக முடியாது என்பதைத்தான் ஒப்புக் கொள்ளவில்லை. ஆண்டாள் பக்தி செய்து, பாட்டுப் பாடி, அழுது கண்ணீர் விட்டு, பூமாலை தொடுத்துச் சூட்டி — இப்படியெல்லாம் செய்து கண்ணனை மணந்துகொள்ள வேண்டியிருந்தது. ஆனால் தங்களுக்கு அத்தகைய கஷ்டமே தேவையில்லை. தங்களைக் கிருஷ்ண பகவான் பார்த்துவிட வேண்டியதுதான். ருக்மணி, சத்தியபாமாவையும், ராதையையும் கோபிகா ஸ்திரீகளையும் உடனே கைவிட்டு அவர்கள் வீற்றிருந்த சிம்மாசனத்தில் தங்களை ஏற்றி உட்கார வைத்து விடுவார்!"



தொடர்ச்சி 37 ஆம் பக்கம்......

# வியர்க்குருவினின்று நிவாரணம் பெற டால்கம் பவுடர் போதாது, நைஸில் வேண்டும்.

## நைஸில் உபயோகியுங்கள் வியர்க்குருவினின்று விரைவில் நிவாரணம் பெறுங்கள்.



நைஸில், <u>மருந்துக்கலவையுள்ள</u> பவுடர் ஆகும். வியர்க்குருவின் எந்தவிதத் தொல்லையிலிருந்தும் உடனடியாக நிவாரணம் அளிப்பதற்கென்றே விசேஷமுறையில் தயாரிக்கப்பட்டதாகும். டால்கம பவுடர்களைப் போலன்றி, பிரச்சினை மோசமாவ தனின்றும், பரவுவத னின்றும் எதிர்த்துக் காக்கிறது இது.

1. அளவுக்கு மீறிய வியர்வையைத் தடுக்கிறது. 2. வியர்வையை உறிஞ்சுகிறது. 3. துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை அழிக்கிறது. 4. சருமத்திற்கு இதமளிக்கிறது.




GLL-8808 R



**திருப்பங்களில் வலுவான பிடிப்பு !**

ரிங் சைப்ஸ் கொண்ட முதல் ஸ்கூட்டர் டயர், அதாவது பாதையில் நல்ல பிடிப்பு. கடினமான திருப்பங்களிலும்... அதிகபட்ச வேகத்திலும் கூட.

# ஸியெட் ஸ்கூட்டர் டயர்கள்-ஏன்?





**முழுமையான பாதுகாப்பு !**

கரடு முரடான பாதைகளில், சடன் பிரேக் போட வசதியாக நூதன ட்ரெட் அமைப்பு. ஸியெட் ஸ்கூட்டர் டயர் எந்தத் தொந்தரவையும் எளிதாக சமாளிக்கிறது.





**ஜப்பானிய நுட்பம்!**

ஸியெட் இப்போது ஜப்பான் நாட்டு யோகோஹாமா ரப்பர் கம்பெனியின் கூட்டுறவோடு, அதிநவீன டயர் தொழில் நுட்பத்தை அறிமுகப் படுத்துகிறது.



**சௌகரியமான பயணம்!**

தூரம் குறைவோ கூடுதலோ, பயணம் சௌகரியமாக அமைகிறது.

ஆகவே ஸியெட்

ஏனெனில் ஸியெட் மட்டுமே மிகச்சிறந்த டயர்களைத் தயாரிக்கிறது! .

**ஸியெட்**
**ஸ்கூட்டர் டயர்களையே கேட்டு வாங்குங்கள்**

**ஸியெட்**



**பார்ன் டஃப்**

32 ஆம் பக்கத் தொடர்ச்சி...

"ஐயா! நீர் முகஸ்துதி செய்வதில் சமர்த்தராயிருக்கிறீர்! அது எனக்குப் பிடிப்பதேயில்லை."

"அம்மணி! முகஸ்துதி என்றால் என்னவோ?"

"முகத்துக்கு நேரே ஒருவரைப் புகழ்வதுதான்."

"அப்படியானால் சற்றே நீங்கள் திரும்பி முதுகைக் காட்டிக் கொண்டு உட்காருங்கள்."

"எதற்காக....?"

"முகத்தைப்பார்க்காமல்முதுகைப் பார்த்துக் கொண்டு புகழ்ச்சி கூறுவதற்காகத்தான். அதில் ஒன்றும் தவறு இல்லையல்லவா?"

"நீர் பேச்சில் மிகக் கெட்டிக்காரராயிருக்கிறீர்."

"இப்போது தாங்கள் அல்லவா முகஸ்துதி செய்கிறீர்கள்?"

"நீரும் உமது முகத்தைத் திருப்பிக் கொண்டு, முதுகைக் காட்டுவது தானே?"

"மகாராணி! போர்க்களத்திலாகட்டும், பெண்மணிகளிடமாகட்டும், நான் முதுகு காட்டுவது எப்போதும் கிடையாது. தாங்கள் தாராளமாய் என்னை முகஸ்துதி செய்யலாம்!"

இதைக் கேட்டு விட்டு, நந்தினி 'கலீர்' என்று சிரித்தாள்!

"நீர் மந்திரவாதிதான்; சந்தேகமில்லை. நான் இம்மாதிரி வாய்விட்டுச் சிரித்து வெகு காலம் ஆயிற்று!" என்று சொன்னாள்.

"ஆனால் அம்மணி! தங்களைச் சிரிக்கப் பண்ணுவது வெகு அபாயம்! தடாகத்தில் தாமரை சிரித்து மகிழ்ந்தது; தேன் வண்டு மயங்கி விழுந்தது!" என்றான் வந்தியத் தேவன்.

"நீர் மந்திரவாதி மட்டுமல்ல; கவியும் போலிருக்கிறதே!"

"நான் முகஸ்துதிக்கும் அஞ்ச மாட்டேன்; வசவுக்கும் கலங்க மாட்டேன்."

"உம்மை யார் வைதது?"

"சற்று முன் என்னைக் 'கவி' என்றீர்களே?"

"அப்படியென்றால்....?"

"நான் சிறுவனயிருந்தபோது என்னைச் சிலர் 'குரங்கு மூஞ்சி' என்று சொல்வதுண்டு. வெகு நாளைக்குப் பிறகு இன்றைக்குத்தான் தங்களுடைய பவளச் செவ்வாயினால் அதைக் கேட்டேன்."

"உம்மையா 'குரங்கு மூஞ்சி' என்றார்கள்? யார் அப்படிப்பட்ட புத்திசாலிகள்?"

"அவர்களில் யாரும் இப்போது உயிரோடில்லை."

"உம்மை நான் அவ்விதம் சொல்லவில்லை. கவி பாடக் கூடியவர் போலிருக்கிறதே என்று சொன்னேன்."

"கொஞ்சம் கவியும் பாடுவேன். ஆனால் பகைவர்களுக்கு முன்னால் தான் பாடுவேன். வில்லம்பினால் சாகாதவர்கள் சொல்லம்பினால் சாகட்டும் என்று!"

"ஐயா, கவி ராஜ வீர சிங்கமே! உம்முடைய பெயர் என்னவென்று இன்னமும் சொல்லவில்லையே!"

"என் சொந்தப் பெயர் வந்தியத் தேவன்; பட்டப் பெயர் வல்லவரையன்."

"அரசர் குலத்தினரா?"

"பழைய புகழ் பெற்ற வாணாதிராஜர் குலத்தில் வந்தவன்!"

"இப்போது உங்கள் ராஜ்யம்....?"

"மேலே ஆகாசம்; கீழே பூமி; இப்போது நான் சகல பூமண்டலத்துக்கும் ஏக சக்ராதிபதி!"

நந்தினி சிறிது நேரம் வல்லவரையனை ஏறத் தாழப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"அப்படி ஒன்றும் நடக்காத காரியம் இல்லை. உம்முடைய பூர்வீக ராஜ்யத்தை நீர் திரும்பவும் பெறலாம்."

"அது எப்படி சாத்தியம்? புலியின் வயிற்றுக்குள்ளே போனது திரும்பவும் வருமா? சோழ சாம்ராஜ்யத்தில் சேர்ந்த அரசு திரும்பக் கிடைக்குமா?"

"கிடைக்கும்படி செய்ய என்னால் முடியும்."

"அம்மணி! வேண்டாம்! இராஜ்யம் ஆளும் ஆசை எனக்கு எப்போதும் கிடையாது. கொஞ்சம் இருந்ததும் இன்றைக்குச் சுந்தர சோழ சக்கரவர்த்தியைப் பார்த்த பிறகு அடியோடு போய்விட்டது. இம்மாதிரி பிறர்



கையை எதிர்பார்த்துச் சக்கரவர்த்தி யாயிருப்பதைக் காட்டிலும் மறு நாள் உணவு எங்கே கிடைக்கும் என்று தெரியாத சுதந்திர மனிதனுயிருப் பதே மேல்."

"என்னுடைய கருத்தும் அது தான்!" என்ருள் நந்தினி. பிறகு ஏதோ மறந்து போன விஷயத்தை ஞாபகப்படுத்திக் கொண்டவள் போல், "சின்னப் பழுவேட்டரை யரின் ஆட்கள் உம்மை எதற்காகத் தேடுகிருர்கள்?" என்று கேட்டாள்.

"தங்களுடைய தாதிப் பெண்ணைப் போல் அவருக்கும் என்பேரில் சந் தேகம் உண்டாகிவிட்டது."

"என்ன சந்தேகம்?"

"பனை இலச்சினை உள்ள முத்திரை மோதிரம் என்னிடம் எப்படி வந்தது என்று."

நந்தினியின் முகத்தில் பயத்தின் சிறிய சாயல் தென்பட்டது.

"மோதிரம் எங்கே?" என்று திடுக் கிட்ட குரலில் கேட்டாள்.

"இதோ இருக்கிறது, அம்மணி! இலேசில் அதைப் போக்க அடித்து விடுவேனு?" என்று கூறிக் கொண்டே மோதிரத்தை எடுத்துக் காட்டினன்.

"இது உம்மிடம் இருப்பது அவ ருக்கு எப்படித் தெரிந்தது?" என்று நந்தினி கேட்டாள்.

"சுந்தர சோழ சக்கரவர்த்தியைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை என் மனத்தில் நெடு நாளாக இருந்தது. அதற்கு இந்த முத்திரை மோதிரத்தை உபயோகப்படுத்திக் கொண்டேன். பார்த்து முடிந்த பிறகு இந்த மோதிரம் என்னிடம் எப்படி வந்தது என்று கோட்டைத் தளபதி கேட்டார்..."

"நீ என்ன சொன்னுய்?" என்று நந்தினி விளுவிய குரலில் திகில் தொனித்தது.

"தங்கள் பெயரைச் சொல்ல வில்லை, அம்மணி! பெரிய பழுவேட் டரையர் கொடுத்தார் என்று சொன் னேன். கடம்பூர் மாளிகையில்கொடுத் தார் என்றும் சொன்னேன்...."

அவள் முகத்திலும் குரலிலும் இருந்த திகில் நீங்கியது.

"நீ சொன்னதை அவர் நம்பி னரா?" என்று கேட்டாள்.

நந்தினி பெருமூச்சு விட்டாள்.

"முழுதும் நம்பிய தாகத் தெரியவில்லை. அதனுல்தானே என் னைப் பின்தொடரும் படி ஆட்களை விட்டிருக்க வேண்டும்? தலையனர் திரும்பி வந்ததும் என்னை அவர் முன்னுல் நிறுத்தி உண்மையை அறிய எண்ணியிருக்கலாம்!" என் ருன் வந்தியத்தேவன்.

நந்தினி புன்னகை புரிந்து, "பெரிய பழுவேட்டரையரிடம் நீ பயப்பட வேண்டாம். அவர் உன்னைக் கடித்துத் தின்றுவிடாமல்நான் பார்த்துக்கொள் கிறேன்" என்ருள்.

"அம்மணி! தனதிகாரியின் பேரில் தங்களுடைய செல்வாக்கு எவ்வளவு என்பது உலகம் அறிந்த செய்தி. ஆனல் எனக்கு வெளியில் அவசர காரியம் இருக்கிறது. ஆகையினுல் தான் தப்பிச் செல்லத் தங்கள் உதவி யைக் கோருகிறேன்."

"அப்படி என்ன அவசர வேலை இருக்கிறது?"

"எத்தனையோ இருக்கிறது. உதா ரணமாக, ஆழ்வார்க்கடியானரைப் பார்த்துத் தங்கள் மறுமொழியைச் சொல்ல வேண்டும். அவருக்கு என்ன சொல்லட்டும்?"

"அவருக்கு நந்தினி என்று ஒரு சகோதரி இருந்தாள் என்பதை அடி யோடு மறந்துவிடும்படி சொல்லு!"

# விஸ்ட்ரம்

ஒரு டயபடிக் உணவு







நீரிழிவுக்காரர்களுக்கென்றே பிரத்யோகமாக வடிவமைக்கப்பட்டது.

சோர்வை நீக்கி, சக்தியை கொடுத்து தெம்பை ஊட்டுகின்றது

கொழுப்புச் சத்து சிறிதும் இல்லாதது

முழுவதும் தானிய, பருப்பு வகைகளால் ஆனது

செயற்கை வண்ணமோ, மணமோ, ருசியோ சேர்க்கப்படாதது இயற்கை தந்த பாதுகாப்புடன் அளிக்கப்படுகிறது

ஸ்பென்ஸர்ஸ், சிந்தாமணி, நீல்கிரீஸ் மற்றும் எல்லா மருந்துக் கடைகளிலும், டிபார்ட்மெண்டல் கடைகளிலும் கிடைக்கும்.

"சொல்லிவிடலாம்; ஆனால் நடக்கிற காரியமில்லை."

"எது?"

"தங்களை மறப்பதுதான். இரண்டு தடவை தற்செயலாகப் பார்த்த என்னாலேயே தங்களை மறக்க முடியாது போலிருக்கிறதே! வாழ்நாளெல்லாம் தங்களோடு இருந்தவரால் எப்படி மறக்க முடியும்?"

நந்தினியின் முகத்தில் வெற்றிப் பெருமிதத்தின் சாயல் பரிணமித்தது. அவளுடைய வேல் விழிகள் வந்தியத் தேவனுடைய நெஞ்சை ஊடுருவின போல் நோக்கின.

"சக்கரவர்த்தியைப் பார்ப்பதற்கு நீர் ஏன் அவ்வளவு ஆவல் கொண்டிருந்தீர்?" என்று கேட்டாள்.

"உலகப் பிரசித்தி பெற்ற அந்தச் சுந்தர புருஷரைப் பார்க்க நான் விரும்பியதில் வியப்பு என்ன? உலகத்தில் வீர மன்னர்கள் தங்கள் வீரமும், பௌருஷமும் பெருக வேண்டும் என்றும், இராஜ்யமும் கீர்த்தியும் விஸ்தரிக்க வேண்டும் என்றும் விரும்புவார்கள். அவ்விதமே பிரஜைகளைப் பிரார்த்தனை செய்யும்படியும் சொல்வார்கள். ஆனால் நம்முடைய சக்கரவர்த்தியைப் பற்றிப் புத்த பிக்ஷுக்களின் மடங்களில் என்ன பிரார்த்தனை செய்கிறார்கள்?

'......................சுந்தரச்
சோழர் வண்மையும் வனப்பும்
திண்மையும் உலகிற் சிறந்து வாழ்
கெனவே!'

என்று பிரார்த்தனை செலுத்துகிறார்கள். இத்தகைய கலியுக மன்மதனைப் பார்க்க வேண்டும் என்று எனக்கு வெகு நாளாக ஆசையாயிருந்தது..."

"ஆமாம்; சக்கரவர்த்திக்குத் தம்முடைய அழகைப் பற்றி ரொம்பப் பெருமைதான். அவருடைய செல்வக் குமாரிக்கு அதைவிட அதிக கர்வம்..."

"குமாரியா? யாரைச் சொல்லுகிறீர்கள்?"

"பழையாறையில் இருக்கிறாளே, ஒரு அகம்பாவம் பிடித்த கர்வி — அந்த இளையபிராட்டி குந்தவை தேவியைத்தான் சொல்லுகிறேன்!"

வந்தியத் தேவா! நீ அதிர்ஷ்டக்காரன். நீ தேடிக் கொண்டிருந்த உபாயம் இதோ உன் முன்னால் தானே வந்து நிற்கிறது! அதை நன்கு உபயோகப்படுத்திக் கொள்! — இவ்வாறு வல்லவரையன் தனக்குத்தானே சொல்லிக் கொண்டான்.



த்தனை நேரமும் ஒய்யாரமாகப் படுக்கையில் சாய்ந்து படுத்திருந்த நந்தினி திடீரென்று எழுந்து நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

"ஐயா! நான் ஒன்று சொல்கிறேன். அதை ஒப்புக் கொள்வீரா?" என்று கேட்டாள்.

"சொல்லுங்கள் அம்மணி!"

"நீரும் நானும் ஓர் உடன்படிக்கை செய்து கொள்ளலாம். நீர் எனக்கு உதவி செய்ய வேண்டியது; நான் உமக்கு உதவி செய்ய வேண்டியது. என்ன சொல்கிறீர்!"

"அம்மணி! தாங்கள் சோழ மகா ராஜ்யத்தில் சர்வ சக்தி வாய்ந்த தனாதிகாரியின் ராணி. நினைத்ததை நினைத்தபடி சாதிக்கக் கூடிய சக்தி வாய்ந்தவர். நானோ ஒருவித செல்வாக்கும் இல்லாதவன். தங்களுக்கு நான் என்ன விதத்தில் உதவி செய்ய முடியும்!" என்றான்.

அவன் உள்ளத்திலிருந்து பேசுகிறானா, உதட்டிலிருந்து பேசுகிறானா என்று தெரிந்து கொள்ள விரும்பிய நந்தினி தன் கூரிய விழிகளை அவன் மீது செலுத்தினாள்.

வந்தியத்தேவன் அதற்குச் சிறிதும் கலங்காமல் நின்றான்.

"எனக்கு அந்தரங்கமான பணி ஆள் ஒருவர் தேவையாயிருக்கிறது. இந்த அரண்மனையில் உமக்கு வேலை வாங்கிக் கொடுத்தால், ஒப்புக் கொள்வீரா?" என்று கேட்டாள்.

"இதே மாதிரி சேவையை, இன்னொரு மாதரசிக்குச் செய்வதாக ஏற்கெனவே ஒப்புக் கொண்டுவிட்டேன். அவள் வேண்டாமென்று நிராகரித்தால் தங்களிடம் வருகிறேன்!"

"அது யார் அவள், என்னோடு போட்டிக்கு வருகிறவள்?"

"சற்று முன் மிகப் பிரியத்தோடு பேசினீர்களே! அந்த இளைய பிராட்டி குந்தவை தேவிதான்!"

"பொய்! பொய்! அப்படி ஒரு நாளும் இருக்க முடியாது! என்னை வேடிக்கை செய்யப் பார்க்கிறீர்....!"

"மகாராணி! இந்த ஓலையை ஏற்கெனவே புலர் திருடிப் பார்த்துவிட்டார்கள். ஆகையால் தாங்களும் இதைப்பார்ப்பதினால்மோசம்ஒன்றும் வந்துவிடாது!" என்று சொல்லிக் கொண்டே வந்தியத்தேவன் ஆதித்த கரிகாலர் குந்தவைக்குக் கொடுத்த ஓலையை எடுத்து நீட்டினான்.

நந்தினி ஓலையை விளக்கினடியில் பிடித்துக் கொண்டு படித்தாள். படித்து முடித்தபோது அவளுடைய கண்களிலிருந்து கிளம்பிய மின்னல் ஜுவாலை நாக சர்ப்பத்தின் வாயிலிருந்து வெளி வந்து மறையும் அதன் பிளவுபட்ட நாவை வந்தியத் தேவனுக்கு நினைவூட்டியது. அவனை அறியாமல் அவன் உடம்பு நடுங்கியது.

நந்தினி கம்பீர பாவத்துடன் வந்தியத் தேவனைப் பார்த்து, "ஐயா! நீர் இந்தக் கோட்டையிலிருந்து உயிரோடு தப்பிச் செல்ல எண்ணுகிறீர் அல்லவா?" என்று கேட்டாள்.

"ஆம் அம்மா! அதற்குத்தான் தங்கள் உதவியை நாடி வந்தேன்."

"ஒரு நிபந்தனையின் பேரில்தான் உம்மைத் தப்பித்துவிட நான் உதவி செய்யலாகும்."

"நிபந்தனையைச் சொல்லுங்கள்!"

"இந்த ஓலைக்குக் குந்தவை என்ன மறு ஓலை கொடுக்கிறாளோ, அதை மறுபடியும் என்னிடம் கொண்டு வந்து காட்ட வேண்டும். சம்மதமா?"



"மிக அபாயகரமான நிபந்தனை போடுகிறீர்கள்!"

"அபாயத்துக்கு அஞ்சாதவர் என்று சற்று முன்னால் பெருமை அடித்துக் கொண்டீரே?"

"அபாயத்துக்குத் துணிவது என்றால் அதற்குத் தகுந்த பரிசு கிட்ட வேண்டும் அல்லவா.....?"

"பரிசா? பரிசா வேண்டும்? நீர் கனவிலும் அடையக் கருதாத பரிசு உமக்குக் கிடைக்கும். சோழ சாம்ராஜ்யத்தின் இன்று சர்வ சக்தி வாய்ந்தவராய் விளங்கும் பெரிய பழுவேட்டரையர் எந்தப் பரிசுக்காக வருஷக் கணக்காய்த் தவங் கிடக்கிறாரோ, அத்தகைய பரிசு உமக்குக் கிடைக்கும்!" என்று கூறி நந்தினி வந்தியத்தேவன் பேரில் மறுபடியும் மோகனாஸ்திரத்தைத் தூவினாள்.

பாவம்! வல்லவரையனுடைய தலை சுழன்றது. நெஞ்சே! தைரியத்தைக் கடைப்பிடி! அறிவை இழந்து விடாதே! — என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

அச்சமயம் அவனுக்குத் துணை செய்ய வந்ததைப் போல் அருகிலுள்ள தோட்டத்திலிருந்து ஆந்தையின் கடூரமான குரல் கேட்டது. ஒரு தடவை, இரண்டு தடவை, மூன்று தடவை கேட்டது.

வந்தியத் தேவனுடைய உடம்பு சிலிர்த்தது.

நந்தினி தோட்டத்தில் ஆந்தைக் குரல் வந்த இடத்தை நோக்கி, "நிஜ மந்திரவாதியே வந்துவிட்டான்!" என்றாள்.

பிறகு வந்தியத்தேவனைப் பார்த்து, "அவன் எனக்கு இனித்தேவையில்லை. ஆனாலும் இரண்டு வார்த்தை அவனிடம் சொல்லி அனுப்புகிறேன். ஒருவேளை, உன்னைத் தப்பித்து விடுவதற்கும் அவன் உபயோகமாயிருக்கலாம். சற்று நேரம் நீ அதோ அந்தப் பக்கம் போய், இருட்டில் மறைந்து நில்லு!" என்று முன்னம் அவளுடைய தாதிப் பெண் போன திசைக்கு நேர் எதிர்த் திசையைக் காட்டினாள்.

(தொடரும்)

# நாட்டாண்மை

"மெதுவாப் பேசுடா... நாட்டாமையைப் பத்தி நீ பேசறது, யார் காதிலாச்சும் விழுந்துச்சின்னு, பொல்லாப்பு..." என்று எச்சரித்தான் மலைச்சாமி.

கல்லூரி விடுமுறையில் வகுப்புத் தோழன் மலைச்சாமியின் கிராமத்துக்கு முதல் முறையாகப் பட்டணத்திலிருந்து வந்திருந்தான் சேகர்.

பாரதிராஜா 'ப்ராண்ட்' திரைப்படங்களில் வரும் நாட்டாண்மைக்காரர்கள், கற்பனைப் பாத்திரங்களே என்று நினைத்திருந்த சேகருக்கு, மலைச்சாமி சொன்ன விஷயம், உண்மையிலேயே திகைப்பை ஏற்படுத்தியது.

"நாட்டாமைக்காரர்தான், இந்தக் கிராமத்திலே தாசில்தார், போலீஸ், ஜட்ஜ் எல்லாம்... தப்புச் செய்யிறவங்களையெல்லாம் ஊர்ப் பஞ்சாயத்துக்குக் கூட்டி வந்து விசாரிச்சுத் தண்டனை கொடுத்திருவார். யாராவது கொலை செஞ்சிட்டாக் கூட, போலீஸ் இங்கே வந்து கொலையாளியைத் தேடிப் பிடிக்கிறதில்லே, நாட்டாமைக்காரரே கொலையாளியைப் பிடிச்சு, போலீஸ்கிட்டே ஒப்படைச்சிடுவார். ஊரிலே பஞ்சாயத்துக் கூட்டினு, எல்லாரும் கூட்டத்துக்கு வரணும். யாரும் வராமல் இருக்க முடியாது. கூட்டத்திலே நடுவே வந்து கம்பீரமாய் நாட்டாமைக்காரர் உட்கார்ந்து விசாரிச்சார்னு, எந்தக் குற்றவாளியும் நடுங்கிப் போவான். அவரோட முகத்தைப் பார்த்துமே, நடந்த உண்மையையெல்லாம் கக்கிடுவான். நாட்டாமை பாண்டித்தேவரோட அதிகாரம், இப்போன்னு இல்லே, ரொம்பக் காலமாய், பரம்பரை பரம்பரையாய் அவங்க வீட்டுக்காரங்கதான், இந்தக் கிராமத்துக்கு நாட்டாமை. அந்தக் காலத்திலே, ராமநாதபுர ராஜா சேதுபதிகளுக்கு, முடிசூட்டு விழாவின்போதும், நாண்மங்கலக் கொலுவின் போதும், இந்தப் பாண்டித் தேவரோட பாட்டனுர்கள்தான் ராஜகிரீடத்தை எடுத்துக் கொடுக்கிற வழக்கமாம்... அவ்வளவு சரித்திரப் பிரசித்தி பெற்ற பரம்பரை இது..." என்று விரிவாகச் சொல்லிக் கொண்டே வந்தான் மலைச்சாமி.

"என்னடா பெரிய பரம்பரை? ஆளுணப்பட்ட ராஜ பரம்பரையே, இருந்த இடம் தெரியலே... பரம்பரை கிராம முன்சிப்களைக் கூட ஒழிச்சிட்டோம். இந்தப் பரம்பரை நாட்டாமையைப் பார்த்து ஏண்டா இப்படிப் பயப்படறீங்க...?" என்று கேலியாகச் சிரித்தான் சேகர்.

"இது பயமில்லேடா... மரியாதை. நாட்டாமைக்காரர் குடும்பம்னு இங்கே கிராமத்து ஜனங்க எல்லாருக்கும், ஒரு மரியாதை, ஒரு பிரியம் உண்டு..."

"போடா... பயம் என்கிறதை ஒத்துக் கொள்ளாம, வேற வார்த்தைகளைச் சொல்லிச் சமாளிக்கிறே நீ! இந்த ஜனநாயக உலகத்திலே இப்படி ஓர் அடிமைத்தனம் இன்னுமா இருக்கு? டாமிட்... ஒரு தனிப்பட்டவரோட எதேச்சாதிகாரத்துக்கு நீங்க மண்டியிட்டுக் கிடக்கிறீங்க. ஒரு பூர்ஷ்வாக் குடும்பத்துக்கு நீங்க கொத்தடிமையாய் இருந்துக்கிட்டிருக்கீங்க..." என்று உதடுகள் துடிக்க, உணர்ச்சி வசப்பட்டுக் கொதித்தான் சேகர்.

"டேய்! பெரிய பெரிய வார்த்தைகளாய்ப் போட்டு என்னைப் பயமுறுத்தாதேடா...!" என்று சிரித்தான் மலைச்சாமி.

"இந்த ஜனநாயக யுகத்திலே, பரம்பரைக்கும் சர்வாதிகாரத்துக்கும் இடமில்லே..."

"ஜனநாயக யுகத்திலே, தேர்தலிலே ஜெயிச்சு வர்றவன் மட்டும் யோக்கியனாயிருக்கானு? இன்னிக்கு அரசியல்வாதிகள் எல்லாம், சட்டத்தைத் தம் கைகளிலே எடுத்துக்கிட்டு, அதிகாரிகளைத் தம் பைக்குள் போட்டுக்கிட்டு, தனக்கு ஒரு நியாயம், மத்தவங்களுக்கு ஒரு நியாயம்னுதானே வாழுறாங்க...? நல்ல சட்டங்களால் ஆளப்படறதைவிட, ஒரு நல்ல மனிதரால் ஆளப்படறது சிறந்ததுன்னு அரிஸ்டாடில் சொல்லியிருக்கார், இல்லியா?" என்று சேகரை மடக்கினுன் மலைச்சாமி.

"பலே! அரிஸ்டாட்டிலையே இந்தக் கிராமத்துக்கு இழுத்து வந்திட்டியா?" என்று கடகடவென்று சிரித்தான் சேகர்.

அவனுடன் சேர்ந்து சிரித்த மலைச்சாமி, சட்டென்று சிரிப்பை அடக்கிக் கொண்டு, நண்பனின் முதுகில் தட்டினுன்:

"டேய்! அதோ... நாட்டாமை வர்ரூர், பார்..." என்று கிசுகிசுத்த மலைச்சாமியின் குரலில் தென்பட்ட நடுக்கத்தையும் பலவீனத்தையும் கவனித்தான் சேகர்.

நிமிர்ந்து, தூரத்தில் அம்மன் கோயில் அருகே வந்து கொண்டிருந்தவரைப் பார்த்தான் அவன்.

கரிய யானை ஒன்று செம்மாந்து நடந்து வருவதைப் போல், திமிர்ந்த பார்வை வீச்சுடன் வந்துகொண்டிருந்தார் பாண்டித்தேவர்.

அய்க்கண்

அவர் நெருங்கி வந்ததும், மலைச்சாமி சற்றே தெரு ஓரமாக ஒதுங்கி நின்ருன்.

''என்னடா, மலைச்சாமி! எப்போ பட்டணத்திலேருந்து வந்தே?'' — அந்த நெடிய உருவத்தின் காம்பீர்யத்துக்குப் பொருத்தமான வெண்கலக் குரலில் கேட்டார் பாண்டித்தேவர்.

''நேத்து வந்தேங்கய்யா...!'' என்ற மலைச்சாமியின் குரலும், பவ்யமாக ஒலித்தது.

''இந்தத் தம்பி யாரு...? உன்னோட சினேகிதனு?''

''ஆமாங்கய்யா...! என்னோட காலேஜிலே படிக்கிற சேகர், சொந்த ஊர் பட்டணம் தான். இப்போதான் முதல் தடவையாய் எங்க வீட்டுக்கு வந்திருக்கான்.''

''அப்படியா? சினேகிதங்க ரெண்டு பேரும், ஊர் சுத்திப் பார்க்கக் கிளம்பிட்டீங்களா...? சரி சரி... போங்க...'' என்று சொல்லிவிட்டு, நடந்தார் பாண்டித்தேவர்.

மேற்கே, சூரியன் பிரியாவிடை பெற்றுக் கொண்டிருந்தான்.

திடீரென்று — சவுக்குத் தோப்புக்குள்ளேயிருந்து, ஒரு பெண் ஓடி வருவது தெரிந்தது.

தலைவிரி கோலத்தோடு, அவிழ்ந்து குலைந்த சேலையை அள்ளி, உடம்பின் மேல் போட்டுக் கொண்டு, கிழிந்த ரவிக்கை உடலின் மேற்பாதியை மறைக்க இயலாமல் பிரிந்து ஊசலாட, அந்த இளம்பெண், அய்யனார் கோயிலை நோக்கி ஓடிவந்து கொண்டிருந்தாள்.

எதிரே, நண்பர்களைப் பார்த்ததும், திடுக்கிட்டுச் சட்டென்று நின்று, ஆடைகளைச் சரிப்படுத்தியவாறு, மிரள மிரள விழித்தபடி கலங்கினுள் அந்தப் பருவ மங்கை.

''என்னாத்தா, என்ன விஷயம்? ஏன் இப்படி ஓடி வர்றே?'' என்று பதற்றத்துடன் விசாரித்தான் மலைச்சாமி.

அழகிய நீண்ட விழிகளில் கண்ணீர் பொங்கி வழிய, அழுது குமுறியவாறு அவள் நடந்ததைச் சொன்னுள்.

சென்ற மாதம், விஷக் காய்ச்சலில், பெற்றவர்களை ஒரே சமயத்தில் பறிகொடுத்த அந்தப் பெண், கோட்டைக்குடியிலிருக்கும் சித்தப்பாவின் வீட்டுக்குப் போய்க் கொண்டிருந்தாளாம். வழியில், செம்பட்டிச் சவுக்குத் தோப்பில், யாரோ நான்கு இளைஞர்கள் அவளை மடக்கித் தூக்கிக் கொண்டு போய்க் கற்பழித்து விட்டார்களாம். அவளுடைய அலறலைக் கேட்டு அங்கே வந்த ஒரு பெரியவரைக் கண்டதும், அந்த இளைஞர்கள் ஓடிவிட்டார்களாம். அவர்களை விரட்டிக் கொண்டு அந்தப் பெரியவர் போயிருக்கிறாராம்.

அவள் கண்ணீரும் கம்பலையுமாக, தனக்கு ஏற்பட்ட அவலத்தைச் சொல்லி முடித்த போது, சவுக்குத் தோப்பிலிருந்து, மலைச்சாமியின் தகப்பனுர் சீனித்தேவர் வந்து கொண்டிருந்தார்.

''தறுதலைப் பயல்கள்! ஓடிப் போயிட்டானுங்க... அநியாயமா ஒரு பொண்ணைக் கெடுத்துப்புட்டானுங்களே...'' என்று சீற்றமும் வருத்தமும் பொங்க, அந்தப் பெண்ணைப் பார்த்தார் சீனித்தேவர்.

''யாரப்பா அந்த ராஸ்கல்ஸ்?'' என்று ஆத்திரம் பொங்க வெடித்தான் மலைச்சாமி.

''அந்த நாலு பேரும் யாருன்னு பார்த்திட்டேன்... என்னைப் பார்த்ததும், பிச்சுக்கிட்டு ஓடிட்டானுங்க, பொட்டைப் பயல்க!'' என்று பல்லைக் கடித்துச் சினந்தவர், அந்தப் பெண் பக்கம் திரும்பி, ''ஆத்தா! நீ இனிமே தனியா எங்கும் போக வேணும். இருட்டிப் போயிருச்சு... இன்னிக்கி ராத்திரி நாட்டாமைக்காரர் வீட்டிலே தங்கிட்டு நாளைக்கு உங்க ஊருக்குப் போவலாம்... நாட்டாமைக்காரர்கிட்டே சொல்லி, அந்தக் காலிப்பயல்களைப் புடிச்சு ஒதைக்கச் சொல்றேன்...'' என்ருர் சீனித்தேவர்.

மறுநாள் —

அம்மன் கோயில் முன்னுல் இருந்த ஆலமரத்தின் நிழலில், ஊர்க் கூட்டம் கூடியது.

நடுமேடையில், கம்பீரமாக உட்கார்ந்திருந்தார் பாண்டித்தேவர்.

இருபக்கங்களிலும், ஊர்ப் பெரியவர்கள், அம்பலக்காரர்கள், சேர்வைக்காரர்கள் அமர்ந்திருந்தார்கள்.

கூட்டத்தின் ஓர் ஓரத்தில் மலைச்சாமியோடு சேகரும் உட்கார்ந்து, வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான்.

இன்னொரு பக்கத்தில், அந்த ஏழைப் பெண் தலைகுனிந்தபடி நின்று கொண்டிருந்தாள்.

''நேத்திக்குச் சாயந்தரம், இந்தப் பொண்ணு, கூலி வேலை செஞ்சு பொழைக்கிறதுக்காக, கோட்டைக்குடியிலே இருக்கிற சித்தப்பா வீட்டுக்குப் போய்க்கிட்டிருக்கிறப்போ, நம்ம ஊர்ப் பயல்கள் இந்தப் பொண்ணை சவுக்குத் தோப்பிலே வழி மறிச்சுக் கெடுத்திட்டாங்க... அதை நேரிலே பார்த்திருக்கிறுரு நம்ம மேலத்தெரு சீனித்தேவர்...'' என்று விவகாரத்தைத் தெரிவித்த நாட்டாண்மைக்காரர், சீனித்தேவர் பக்கம், தம் அகன்ற விழிகளைத் திருப்பினுர்.

உடனே, சீனித்தேவர் எழுந்து நின்று, தம் மேல் கிடந்த துண்டை எடுத்து இடுப்பில் கட்டிக் கொண்டார்.

''அந்தப் பயல்கள் யாருன்னு தெரியுமா?''

''தெரியுமுங்க... கிழக்குத்தெரு மூக்கையாத் தேவரோட மகன் சீனைச்சாமி, ஆனைவெட்டி வீட்டுக் கருப்பையா சேர்வை மகன் காளிமுத்து, மடைதிருப்பி வீட்டுச் சுப்பையா அம்பலம் மகன் வேடப்பன்...'' என்று சீனித்தேவர் தெரிவித்ததும், அந்த மூன்று இளைஞர்களும், பயமறைந்த முகத்தோடு எழுந்து, நாட்டாண்மைக்காரர் முன்னுல் போய் நின்ருர்கள்.

''ஏன்டா, சீனித்தேவர் சொன்னதெல்லாம் உண்மைதானு...? இந்தப் பொண்ணைக் கெடுத்த பொட்டைப்பயல்க நீங்கதானு?'' என்று உறுமியபடி, சிவந்த கண்களில்

# 28 வயதினிலே, குடும்ப பட்ஜெட், வேலை நிரந்தரப் பிரச்னை வீடுவாங்க அட்வான்ஸ் இவற்றிலேதான் உங்கள் முழுநேர எண்ணம். அப்படியிருக்க, 'பொக்கிஷம் போன்ற 32 பற்களை'ப் பற்றி நினைப்பதற்கு நேரமேது?



## அச்சமயங்களில் போர்ஹென்ஸ் பல்பராமரிப்பு உங்களைக் கவனிப்பதில் மிகவும் அக்கறை காட்டுகிறது.

வாழ்க்கையை அமைத்துக் கொள்வதில் துவக்க காலத்திலிருப்பவர் நீங்கள். வேலையை நிரந்தரமாக்கி வீடு வாங்கி வாழ்க்கையை நன்கு உருவாக்குவதிலே தான் உங்கள் எண்ணம், செயல் எல்லாம். அப்படியிருக்க ஈறுகள் சுருங்குவதிலும், பற்கள் சிதைவடைவது பற்றியும் நீங்கள் நினைப்பது எங்கே?

உண்மையிலேயே இன்று நீங்கள் 'பொக்கிஷம் போன்ற 32 பற்களைப்' பராமரிக்காவிட்டால் பின்னால் நீங்கள் சிரித்து மகிழ முடியாது.

வினா: உங்கள் டூத்பேஸ்ட் பற்களை மட்டும் சுத்தப்படுத்துகிறதா அல்லது ஈறுகளையும் கெட்டிப்படுத்துகிறதா? மூச்சிலே புத்துணர்ச்சியை மட்டும் அளிக்கிறதா அல்லது ஈறுகளையும் உறுதிப்படுத்துகிறதா?

போர்ஹென்ஸ் தன் பல்வகைப் பல் பராமரிப்புகளால் இத்தகைய விஷயங்களைக் கவனிப்பதில் அக்கறை காட்டுகிறது.

உதாரணமாக, போர்ஹென்ஸ் டூத்பேஸ்ட் மற்றும் டூத் பவுடர் ஒப்பற்ற அஸ்ட்ரிஞ்ஜென்ட் கொண்டவையாகும். இது பற்களுக்கு உறுதியான அஸ்திவாரம் அளிப்பதற்கு ஈறுகளை வலுப்படுத்துகிறது. ஆகவே அவை நீடித்த ஆயுளைப் பெறுகின்றன. ஈறுகள், பற்களுக்கு பாதுகாப்பும் பிடிமானமும் அளித்து சுவாசத்தில் துர்நாற்றம் உண்டாக்கும் பாக்டீரியாக்கள் உருவாக இடமளிப்பதில்லை. அதாவது துர்நாற்றத்தை தடுக்கிறது.

இதுமட்டுமா, ஸுப்பர் ஃபைட்டர் போர்ஹென்ஸ் ஃப்ளோரைட், அமிலத் தாக்குதலைத் தடுத்திட பல் எனாமலை ஆற்றலுடன் கெட்டிப்படுத்துகிறது.

போர்ஹென்ஸின் டூத்பிரஷ் கூட இரட்டைச் செயல் கொண்டதாகும். பற்களுக்கு பளிச்சிடும் வெண்மையூட்டி ஈறுகளையும் தேய்த்துக் கொடுக்கிறது.

நாங்கள் சொல்வதை நீங்கள் அப்படியே ஏற்க வேண்டுமென்பதில்லை. போர்ஹென்ஸை உபயோகித்துப் பார்த்த பின்பே அதன் உண்மை மதிப்பை அறிய முடியும் என்பது உங்களுக்குத் தெரியும்.



**போர்ஹென்ஸ்**
பராமரிப்பு
32 என்றும் பத்திரம்

போர்ஹென்ஸ் டூத்பேஸ்ட்,
போர்ஹென்ஸ் ஃப்ளோரைட் டூத்பேஸ்ட்,
போர்ஹென்ஸ் டூத்பவுடர்,
போர்ஹென்ஸ் டூத்பிரஷ்.

GM-104/86 Tam

நெருப்புப் பொறி பறக்க அவர்களைப் பார்த்தார் பாண்டித்தேவர்.

"டேய் தண்டல்! இந்தப் போக்கிரிகளைப் பிடிச்சுக்கட்டு... ஒவ்வொருத்தனையும் தனித் தனியாய்க் கட்டி வச்சு, ஆளுக்கு இருபது சாட்டையடி குடு..." என்று தண்டனை விதித்தார் நாட்டாண்மைக்காரர்.

தண்டல்கார வேலு, அந்த மூன்று பேரையும் மூன்று கம்பங்களில் கட்டிவிட்டு, சாட்டையை எடுத்து அடிக்கத் தொடங்கினான்.

சீனித்தேவர் சொன்ன சாட்சியத்தைக் கேட்டுத் திகைத்துப் போனான் சேகர்.

"ஏண்டா மலைச்சாமி! என்னடா உங்கப்பா இப்படிச் சாட்சி சொல்றார்? நேத்து சாயந்தரம், இந்தப் பொண்ணைக் கெடுத்திட்டு ஓடிப் போனவங்க நாலு பேர்ன்னு சொன்னாரே — இப்போ மூணு பேரைத்தானே சொல்லியிருக்கார்?" என்று சேகர் மெல்லிய குரலில் கேட்டதும், மலைச்சாமி குழம்பிப் போனான்.

அந்த நான்காவது இளைஞனை, ஏன் அப்பா சொல்லாமல் மறைத்துவிட்டார்...?

குற்றவாளிகளை, பளீர் பளீர் என்று சாட்டையால் அடித்துக் கொண்டிருந்தான் தண்டல்கார வேலு.

தண்டனை நிறைவேற்றப்படுவதைப் பார்த்தவாறு இருந்த நாட்டாண்மை, சட்டென்று சீனித்தேவர் பக்கம் பார்வையைத் திருப்பினார்.

"சீனித்தேவரே! நேத்து ராத்திரி, இந்தப் பொண்ணு என்கிட்டே புகார் பண்ணினப்போ, நாலு பேர் சவுக்குத் தோப்பிலே வழிமறிச்சதாச் சொல்லுச்சே — நீங்க மூணு பேரைத்தானே சொல்லியிருக்கீங்க? இன்னொருத்தன் யார்?" என்று உறுதியான குரலில் பாண்டித்தேவர் கேட்டதும், சாட்சி சற்றே நடுங்கிப் போனார்.

"ஏன் பயப்படறீங்க...? பயந்துக்கிட்டு உண்மையை மறைக்கிறது குத்தம் மட்டுமில்லே — பெரிய பாவமும் கூட... உண்மையை மறைக்காம சொல்லுங்க..." என்று மேலும் அழுத்தமாகக் கனத்தது நாட்டாண்மையின் குரல்.

"அந்த நாலாவது ஆள்... யாருன்னா... அது... உங்க மகன் வெள்ளைச்சாமிதான்...." என்று சீனித்தேவர் சொன்னதும், கூட்டம் முழுவதும் திடுக்கிட்டு நிமிர்ந்து உட்கார்ந்தது.

குற்றச்சாட்டுக்கு உள்ளான வெள்ளைச்சாமி—எழுந்துநிற்கவில்லை; அங்கே அவனைக் காணோம்...

சீனித்தேவர் சொன்னதைக் கேட்டதும், பாண்டித்தேவர் அதிர்ச்சியடைந்ததாகவே தெரியவில்லை.

கூட்டத்தில் மெல்லிய முணுமுணுப்பு எழுந்ததே தவிர, யாரும் உரக்க எதுவும் பேசவில்லை. எல்லோரும் நாட்டாண்மை முகத்தையே பார்த்தவாறிருந்தார்கள்.

பாண்டித்தேவர் நிச்சலனமாக உட்கார்ந்தபடி, மக்களை ஏறிட்டுப் பார்த்தார்..

தம் மகனுக்குத் தண்டனை கொடுக்காத இந்த நாட்டாண்மைக்காரரை எதிர்த்து, ஊரிலே ஒருவர் கூட வாய் திறக்கவில்லையே...?

— சேகரின் உள்ளத்திற்குள் ஆத்திரம் எரிமலையாய்ப் பொங்கிக் குமுறிக் கொண்டிருந்தது.

கூட்டத்தில், பாண்டித்தேவரின் குரல் மீண்டும் கணீரென்று ஒலித்தது: "குற்றவாளிகளுக்குத் தண்டனை கொடுத்திட்றதினாலே மட்டும், இந்த ஏழைப் பொண்ணுக்கு நியாயம் கிடைச்சிடாது... நம்ம ஊருக்கு வந்து, கற்பை இழந்திட்டு நிக்கிற இந்தப் பொண்ணுக்கு வாழ்க்கையும் கிடைக்கணும்... இவளைக் கெடுத்த குற்றவாளிதான் இவளோட வாழ்க்கைக்கும் பதில் சொல்லணும்... அதனாலே இவளைக் கற்பழிச்சவங்களிலே ஒருத்தனை வெள்ளைச்சாமி சாட்டையடிகளைப் பெற்றுக் கொள்வதோடு இவளைப் பெண்டாட்டியாயும் ஏத்துக்கிட வேணும்னு தீர்ப்புச் சொல்லுறேன்... அந்தக் கல்யாணம் இன்னிக்கே நடக்கணும். அதுக்குத் தாலி, பட்டுச் சேலை எல்லாம் வாங்கிவர்றதுக்குத்தான் வெள்ளைச்சாமியை ராமநாதபுரம் கடைத்தெருவுக்கு அனுப்பியிருக்கிறேன்... இன்னும் கொஞ்ச நேரத்திலே வந்திருவான்... என் மகன் வெள்ளைச்சாமிக்கும் இந்தப் பொண்ணுக்கும் நடக்கிற கல்யாணத்தை நீங்க எல்லாரும் இருந்து பார்த்து ஆசீர்வதிக்கணும்..." என்று நிச்சலனமான குரலில் பிரகடனம் செய்த நாட்டாண்மைக்காரரைப் பார்த்து, கூட்டத்தில் அத்தனை பேரும் விக்கித்துப் போய் உட்கார்ந்திருந்தார்கள்.

அந்த நேரத்தில்தான், இதுவரை ஓர் ஓரத்தில் தலைகுனிந்தபடி நின்றிருந்த அந்தப் பெண் பேச ஆரம்பித்தாள்.

"அய்யா... ஒங்க தீர்ப்பு ரொம்பவும் நியாயமான தீர்ப்புத்தான். ஒங்க நெலையில அப்படியொரு தீர்ப்பைத்தான் வழங்க முடியும். அதுக்கு நான் தலைவணங்கறேன். ஆனா... என்னைப் பலவந்தமாகப் பிடித்துக் கதறக் கதறக் கற்பழித்த ஒருத்தரோடு நான் எப்படி வாழ முடியும்னு தெரியலே, அவரைப் பார்க்கறபோதெல்லாம், இவர் என்னை மிருகத்தனமாகக் கற்பழிச்சவர்ங்கிற எண்ணம்தான் எனக்குவரும். மனசு ஒட்டவே ஒட்டாது. இந்த நெலையிலே அவரைக் கலியாணம் கட்டிக்கிறதுங்கிறது — அவரோடு காலம்பூரா வாழணும்கிறது ஒரு சித்திரவதையாத்தானுங்கய்யா இருக்கும். அதனால, ஒங்க முடிவுக்கு நான் கட்டுப்பட முடியாத நெலையில இருக்கிறதுக்காக என்னை மன்னிச்சிடுங்கய்யா... நான் எப்பவும் போல தோட்டம் தொரவுல கூலி வேலை செஞ்சு காலத்தை ஓட்டிக்கிறேன்... மன்னிச்சிடுங்கய்யா..." — சொல்லிக் கொண்டே வந்த அந்தப் பெண் நாட்டாண்மையின் கால்களைத் தொட்டு வணங்கி, விறுவிறுவென்று நடக்க ஆரம்பித்தபோது, சேகர் மட்டுமல்ல, நாட்டாண்மையோடு ஊர்க் கூட்டமும் ஸ்தம்பித்துப் போய்விட்டது!




# ஸா:ப்ட் அண்ட் ஸில்க்கி ஹேர் ரிமூவிங் லோஷன்.







ஸா:ப்ட் அண்ட் ஸில்க்கி ஹேர்
விங் லோஷன்.
இந்த ஹேர் ரிமூவிங் லோஷனை
யோகப்படுத்துவதில் எந்த சிரமமு
லை, சங்கடமுமிலலை.
ிருதுவான மேனி மீது
தாகவும் சீராகவும் பரவுகிறது!
இரண்டு சைஸ்களில் கிடைக்கிறது:
மி.லி. மற்றும் 45 மி.லி.
ஆம்! எத்தனை சிக்கனம்.
ஸா:ப்ட் அண்ட் ஸில்க்கி லோஷன
கமெங்கும் மென்மை உணர்வு.
45மி.லி.பாட்டில் விலை ரூ. 10.70
வரிகள் தனி)




லக்மே

*இச்சலுகை 45 மி.லி.பாட்டிலில், சரக்குகள் தீரும் வரை.



# ஆபத்தான வளைவுகள்

**முகுந்தன்**

**முன் கதை:**

வேலையில்லாப் பட்டதாரி அருண், சராகா பார்மசூட்டிகல்ஸ் என்ற நிறுவனத்துக்கு இண்டர்வியூவுக்காகப் போய்க் காத்திருக்கையில் அங்கு வந்த ஒரு குறுந்தாடி இளைஞன் தான் அமர்ந்திருக்கும் நாற்காலியில் பென்சிலால் தட்டி, தான் ஆபத்தில் இருப்பதை தந்தி பாஷையில் அருணுக்கு உணர்த்துகிறான். தந்தி பாஷையிலும் 'முட்டைக் கண்ணன்' என்ற தனது பள்ளிக் காலப் பெயரால் அவன் தன்னை அழைக்கவும் அருணுக்கு ஆச்சரியமாய் இருக்கிறது. அவன் எந்த முடிவும் எடுப்பதற்குள் குறுந்தாடி இளைஞன் வேகமாக வெளியேற, அந்த அலுவலக அறையில் காத்திருந்த மற்றொருவன் அவனை நோக்கிச் சுட முயன்று, குறி தவறிவிடவும் அவன் பின்னாலேயே வெளியேறுகிறான். போகும் அவசரத்தில் அருணின் பாக்கெட்டில் ஒரு சிறு காகிதத்தைச் செருகிவிட்டுப் போகிறான் குறுந்தாடி. அதே நிறுவனத்தில் வேலை கிடைத்த சந்தோஷத்தில் அருண் ஹோட்டலில் காபி சாப்பிட்டுவிட்டுப் பணம் கொடுக்கப் பாக்கெட்டைத் துழாவியபோது குறுந்தாடிக்காரன் செருகிய சீட்டில் இருந்த வாசகத்தைப் படித்து வியந்தபடி தெருவில் நடக்கையில், ஓர் அழகான பெண் பஸ்ஸுக்குச் சில்லறை இல்லை என்று பொய் சொல்லி அவனிடம் ஒரு ரூபாய் பெற்றுக் கொண்டு எதிர்க் கடையில் போன் செய்யப் போகிறாள்.

அதே நேரத்தில் ஒரு பங்களாவில் போன் அடிக்க, பங்களாக்காரர் போனில் கிடைத்த மர்மமான ஆணைகளை நிறைவேற்றப் பெட்டியுடன் புறப்படுகிறார்.

## 3

அருண் வலசரவாக்கம் போய்ச் சேர்ந்தபோது நன்றாக இருட்டிவிட்டது. சட்டைப் பையில் திணிக்கப்பட்ட துண்டுக் காகிதத்தில் இருந்த முகவரியை அடைந்தபோது, வீட்டு வாசலில் பூட்டியிருந்த பூட்டு அவனைப் பார்த்துச் சிரித்தது. அக்கம்பக்கத்து வீட்டுக்காரர்கள் மொத்தப் பேரும் ஏதோ சபதம் எடுத்துக் கொண்டவர்களைப் போல் வீட்டுக்குள்ளே முடங்கிக் கிடந்தார்கள். யாரிடம் விசாரிப்பது என்று விழித்துக் கொண்டிருந்தபோது, "சார்! இங்கே வாங்க!" என்று ஒரு குரல் கேட்டது.

அழைத்தவர், அருகிலேயே இருந்த ஒரு பெட்டிக் கடைக்காரர்தான்.

நெருங்கியதும், "இந்தாங்க!" என்று ஒரு சாவியை எடுத்து நீட்டினார். அருண் தயங்கினான்.

"தாடிக்காரரைத் தேடித்தானே வந்திருக்கீங்க? அவர் தகவல் சொல்லிவிட்டுப் போனார்.... வீட்டுக் கதவைத் திறந்து, உள்ளார போய் உட்காருங்க.... வந்துடுவாரு!"

அப்படியே செய்யத் தீர்மானித்தான் அருண்.

"நுழைஞ்சதும் லெப்ட்லே ஸ்விட்சு இருக்குது சார்.... லைட் போட்டுக்குங்க....!" என்று ஒரு குறிப்பும் கொடுத்தார் கடைக்காரர்.

வராந்தாவை அடுத்து ஒரு ஹால். சிறியதாக இருந்தாலும் துப்புரவாகக் காணப்பட்டது. சிறிய மேஜை, இரண்டு இரும்பு நாற்காலிகள் என்று சிக்கனமான ஃபர்னிச்சர், வெளிர் நீல டிஸ்டெம்பர் தாங்கியிருந்த சுவர் ஒன்றில் ஒரே ஒரு படம் தொங்கியது. அதில் பதினைந்து வயதுப் பள்ளி மாணவன் என்.ஸி.ஸி. உடையில் உறைந்து போய் நின்றிருந்தான்....

வாசலில் ஷூ சப்தம் கேட்டது.

அடுத்த விநாடி அந்தத் தாடிக்கார இளைஞன் அருணின் எதிரில் வந்து நின்றான். காலையில் பார்த்ததைவிட அதிகமாகக் களைத்து, கலைந்திருந்தான்.

"அருண்! என்னைத் தெரியவில்லையா? நான்தான் சத்யா.... மிஷன் ஹைஸ்கூலில் நாம் ஒன்றாகப் படித்தோமே, மறந்து விட்டாயா?" என்று சர்வ சகஜமாக அவன் கேட்டதும் ஒருகணம் திகைத்துப் போனான் அருண்.

சத்யா! பிரபல வைர வியாபாரியின் மகனாக, ஆடம்பரத்துடன் தினமும் ஒவ்வொரு காரில் பள்ளி வாசலில் வந்திறங்கி, சக மாணவர்களைப் பிரமிப்பில் ஆழ்த்திய சத்யா.... பள்ளியில் சுதந்திரத் திருநாள் கொண்டாடப்படும்போதெல்லாம் எல்லா மாணவர்களுக்கும் தன் தந்தையின் அன்பளிப்பாக இனிப்புப் பொட்டலம் விநியோகித்த சத்யா.... பள்ளி இறுதித் தேர்வுக்கு முன்னால் நடந்த பிரிவுபசாரக் கூட்டத்தில் வகுப்பு ஆசிரியருக்கு வைர மோதிரம் பரிசளித்துத் திகைக்கச் செய்த சத்யா....

அவனா இவன்! அவனா இப்படித் தாடி மீசையும், அழுக்கு உடையும் கண்களில் சோர்வும் விரக்தியுமாக அடியோடு உருமாறிப் போய் எதிரில் நிற்கிறான்! என்ன ஆயிற்று இவனுக்கு?

''நீ என்னென்ன கேள்விகள் கேட்கத் துடிக்கிறாய் என்று எனக்குப் புரிகிறது அருண்!'' என்றான் சத்யா, இன்னொரு நாற்காலியை இழுத்துப் போட்டு அமர்ந்தபடி. ''நீ பள்ளிப் படிப்பு முடிந்தவுடன் குடும்பத்தோடு வேறு ஊருக்குப் போய்விட்டதால் உனக்குப் பல விஷயங்கள் தெரிந்திருக்காது. என் அப்பாவை அவரது தொழில் கூட்டாளிகளே ஏமாற்றிவிட்டார்கள். கடன் சுமை அளவுக்கு மீறிப் போனதால், அப்பா மஞ்சள் கடிதாக கொடுக்கும்படி நேர்ந்து விட்டது. அந்த அவமானம் தாங்காமல் அவர் தற்கொலையும் செய்து கொண்டுவிட்டார்.....''

அதிர்ந்து போனான் அருண். சத்யா தொடர்ந்தான்.

''சிறு வயதிலேயே அன்னையை இழந்துவிட்டிருந்த நானும் என் தம்பியும் சொத்துக்கள் சிதறி, அப்பாவும் மறைந்து போன பிறகு அநாதைகளாகத் தெருவில் நின்றோம். நான் கல்லூரிப் படிப்பையும், தம்பி பள்ளிப் படிப்பையும் முடித்திருந்த கட்டம் அது. கையிலிருந்த சொற்பப் பணத்துடன் சென்னைக்கு வந்து சேர்ந்தோம். அப்பாவின் நண்பர் ஒருவரது சிபாரிசின் பேரில் அம்பத்தூரில் ஒரு தொழிற்சாலையில் வேலை தேடிக் கொண்டேன். தம்பியைப் படாதபாடுபட்டுக் கல்லூரியிலும் சேர்த்தேன். ஆனால்....''

மேலே எதுவும் பேசாமல் மௌனமாக இருந்தான் சத்யா. மனத்தில் முட்டும் சோகம் அவனது கண்கள் வழியே எட்டிப் பார்ப்பதைக் கவனித்தான் அருண்.

''ஏன் கண் கலங்குகிறாய்? என்ன ஆச்சு?'' என்று கேட்டான் அருண்.

''தம்பியையும் நான் இழந்துவிட்டேன் அருண்.....''

''இஸிட்... என்ன விஷயம்? அவன் எப்படி....''

''கிட்டத்தட்ட அதுவும் ஒரு தற்கொலை போலத்தான்...''

''அவனுக்கு என்ன பிரச்னை? காதல் கீதல் என்று ஏதாவது.....''

''நோ!'' என்ற சத்யா எழுந்து மேஜையின் அருகில் சென்றான். இழுப்பறையைத் திறந்து ஒரு டயரி எடுத்து வந்தான். அதைப் புரட்டி ஒரு 'பேப்பர் கட்டிங்'கை எடுத்து அருணிடம் நீட்டினான்.

அருணின் பார்வை செய்தியின் மீது படர்ந்தது.

*பஸ் மோதி வாலிபர் சாவு!*

சென்னை......
நேற்று காலை பதினொரு மணி



# எம்.ஜி.ஆரின் ஓ.கே. எப்போது?



பரமக்குடியின் சாக்கடைகள் வேறு போக்கின்றி வைகை நதி ஓட வேண்டிய (இப்போது காய்ந்து கிடக்கிற) மணல்படுகையில் சென்று சேர்கின்றன.

பன்றிகளின் மாநாடு, கொசுக்களின் கூடாரம். நுரையீரல்களைக் குலுக்கிக் காயப் படுத்தும் தீவிர நாற்றம். இதற்கிடையில் அங்கங்கே ஊற்றெடுத்த கிணறுகள். பம்ப் செட் போட்டுத் தண்ணீரைத் தொட்டிகளில் நிரப்ப, கட்டணம் கொடுத்துக் குளிக்க ஒரு க்யூ.

''சாக்கடை வந்து கலக்கிற இடத்திலேயே கிணறு தோண்டியிருக்கோம். நிச்சயமா வியாதிங்க வந்துதான் சேரும். ஆனா எங்

அளவில் தேனாம்பேட்டை சிக்னல் அருகே சைக்கிளில் சென்று கொண்டிருந்த ஓர் இளைஞர் மீது பல்லவன் போக்குவரத்துக் கழக பஸ் மோதியதில், அவர் துடிதுடித்துச் செத்தார். அந்த வாலிபரின் பெயர் சந்திரசேகர் (17), கல்லூரி மாணவர்.

இவ்விபத்து குறித்து, போலீசார் விசாரணை செய்து வருகிறார்கள்.

அந்தச் செய்தி 'கட்டிங்'கை சத்யாவிடம் திருப்பிக் கொடுத்தான் அருண்.

''இந்த விபத்துக்குக் காரணம் என்ன தெரியுமா?'' என்று சத்யா கேட்க, உதட்டைப் பிதுக்கினான் அருண்.

''கல்லூரியில் என் தம்பிக்கு எப்படியோ ஏற்பட்டு விட்டிருந்த ஒரு கெட்ட பழக்கம் தான்....''

''குடிப் பழக்கமா?''

''இல்லை... போதை மருந்து! என் தம்பி சந்திரனுக்கு அந்தப் பழக்கம் உண்டு என்பதும், கொஞ்சம் கொஞ்சமாக அவன் அதற்கு அடிமையாகிக் கொண்டிருந்தான் என்பதும் அந்த விபத்து நேர்ந்த பிறகுதான் எனக்குத் தெரிய வந்தது. விபத்து நடந்த அன்று, வகுப்புக்கு 'கட்' அடித்துவிட்டு, ஒரு வெறியில் போதை மருந்து வாங்குவதற்காக கண்மூடித்தனமாகச் சைக்கிளை ஓட்டிக் கொண்டு போயிருக்கிறான் சந்திரன்... பஸ்ஸின் குறுக்கே இவன்தான் பாய்ந்திருக்கிறான். பஸ் டிரைவரால் விபத்தைத் தவிர்க்க முடியாத நிலையில்தான், பஸ் இவன் மீது மோதியிருக்கிறது.... விசாரணையில் இந்த விஷயங்கள் வெட்ட வெளிச்சமாகிவிட்டன... தம்பியின் உடல் சின்னாபின்னமாகி விட்டது. பஸ்ஸின் முன்புறத்திலிருந்து சுரண்டி எடுத்தார்கள் என்றால் எப்படிப்பட்ட பயங்கரமான விபத்துக்கு ஆளாகியிருக்கிறான் என்பது புரியும்...''

அருணின் உடல் சிலிர்த்தது. அந்தக் கோரத்தைக் கற்பனை செய்து கூடப் பார்க்க மனம் இடந்தரவில்லை.

சத்யா நீண்ட நேரம் மௌனமாக இருந்து விட்டுப் பிறகு தொடர்ந்தான்:

''என் தம்பி சந்திரனுக்கு நேர்ந்த இந்த அவலம் என்னுள் ஒரு லட்சியத்தைத் தோற்றுவித்தது. அப்பாவி இளைஞர்களுக்குப் போதை மருந்துகளை விற்பனை செய்து அவர்களது வாழ்க்கையை நாசமாக்கும் சமூக விரோதிகளைத் தேடிப் பிடித்துக் குற்றவாளிக் கூண்டில் நிறுத்த வேண்டும். அந்த முயற்சியில்தான் இப்போது தீவிரமாக ஈடுபட்டிருக்கிறேன்....

''பாராட்ட வேண்டிய செயல்தான் என்பதில் சந்தேகமில்லை.... அதுசரி, இதுவரையில் ஏதாவது கண்டுபிடிக்க முடிந்ததா?''

''கீழ்மட்டத்தில் போதை மருந்தை விற்பனை செய்பவர்கள் யார் யார், கல்லூரி மாணவர்களுக்கு அது எப்படி வந்து சேருகிறது என்று கண்டுபிடித்துவிட்டேன்... போலீசில் உள்ள போதை மருந்து தடுப்புப் பிரிவினர் இத்தகைய நபர்களைப் பிடித்து, தண்டனையும் வழங்கியிருக்கிறார்கள். ஆனால் அவ்வப்போது புதிதுபுதிதாக விற்பனையாளர்கள் தோன்றிக் கொண்டே இருக்கிறார்கள்; நச்சு வியாபாரமும் தொடர்ந்து கொண்டுதான் இருக்கிறது.....''

''நீ சொல்வதைப் பார்த்தால் ஒரு பெரிய ஸ்தாபன ரீதியில் போதை மருந்து விநியோகம் நடைபெறுகிறது போலிருக்கிறதே...''

''அதுதான் உண்மையான நிலைமை... பணபலம், அதிகாரம், ஆள் பலம் ஆகியவை பெருமளவில் உள்ள ஒரு அமைப்புதான் இதில் ஈடுபட்டிருக்கிறது. இத்தனைக்கும் பின்னணியில் உள்ள புள்ளி அல்லது புள்ளிகள் யார்? அதைக் கண்டுபிடித்து அவர்களை அப்புறப்படுத்தினால் தவிர, இது ஓயாது....

களுக்கு வேறு வழியில்ல....

எறும்பு வரிசை போல ஒருபுறம் தண்ணீர் டிரம்களைப் பொருத்திக் கொண்ட மாட்டு வண்டிகள். (வண்டிக்கு நாற்பது காசாம்.) அசுத்தம் கலந்த இந்தத் தண்ணீர் எங்கே போகிறது?

* தண்ணீருக்காகக் காத்திருக்கும் வண்டிகள்



தேறாட்டல்களுக்குச் சப்ளை செய்ய!

பரமக்குடியின் நகர்மன்றத் தலைவர் ரங்காச்சாரியைச் சந்தித்தோம். கன்னிக் கோட்டை திட்டத்தில பூமிக்கு அடியில குழாய்களைப் பதித்துக் கொண்டிருக்கிறோம். அதில் தமிழ்ப் புத்தாண்டு அன்றைக்குத் தண்ணீர் விடப்படும். மேலும் பத்து லட்சம் காலனுக்குத் தண்ணீர்த் தொட்டி கட்டணும். செய்வோம்...."

"பாதாளச் சாக்கடைத் திட்டம் என்னாச்சுங்க?"

"ஸ்கீம்லாம் போட்டாச்சு. பதினொரு கோடி ரூபாய்த் திட்டம். ரொம்ப மாசமா TWAD — ல தூங்கிட்டிருக்கு. பரமக்குடி பாதாளச் சாக்கடைக்கு ஓகேன்னு எம்.ஜி. ஆரே சொல்லணுமாம். அப்பத்தான் முடியும்னுட்டாங்க...." என்றார்.

எம்.ஜி. ஆர். ஓகே சொல்லும் நாள் எப்போதோ?

— எஸ். பி

குறிப்பாக நான் தேடி அலைவது அந்தப் புள்ளிகளைத்தான்...."

"இன்று நீ சராகா பார்மசூட்டிகல்ஸ் ஆபீசுக்கு வந்தது கூட இது சம்பந்தமாகத் தானா?"

ஆமாம். அதைப் பற்றிய விவரம் பிறகு ஒரு சந்தர்ப்பத்தில் சொல்கிறேன். இப்போது உன் உதவி எனக்குத் தேவைப் படுகிறது.... உன்னால் எனக்கு உதவ முடியுமா?"

"எந்த விதத்தில் என்று சொல்லேன்..."

"போதை மருந்து விநியோகம் — வியாபாரத்தில் ஈடுபட்டிருப்பவர்கள் பயங்கரமான ஆசாமிகள்.... கொலைக்கு அஞ்சாதவர்கள்.... தங்கள் பாதைக்குக் குறுக்கே வருபவர்களை அப்புறப்படுத்த எல்லா வழிகளையும் கையாளக் கூடியவர்கள்.... இத்தகையவர்களைப் பற்றி நான் திரட்டியுள்ள தகவல்கள் வேறு யாரிடமாவது இருப்பதே பாதுகாப்பானது. என்னை எந்த நேரமும் ஆபத்து சூழ்ந்திருக்கிறது. உன் கண் எதிரிலேயே என்னைத் தீர்த்துக் கட்ட நடந்த முயற்சியைத் தான் நீ இன்று பார்த்தாய்.... என் வசமுள்ள தகவல்களை நம்பிக்கைக்குரிய ஒருவரிடம் ஒப்படைத்துவிட வேண்டும் என்றிருந்தேன். தற்செயலாகச் சராகாவில் உன்னைக் கண்டதும் கொஞ்சம் நிம்மதி ஏற்பட்டது....."

"மோர்ஸ் முறையில் எனக்குச் செய்தி கொடுத்தாயே — அதை நான் புரிந்து கொள்வேன் என்று எப்படி எதிர்பார்த்தாய்?"

சிரித்தான் சத்யா. "அதுவா....? ரொம்ப சிம்பிள். நீ பத்திரிகை படித்துக் கொண்டிருந்தாய் அல்லவா! நீ படிப்பதையெல்லாம் தன்னிச்சையாக உன் வலது கை, சோபாவின் கைப்பிடியில் தந்தி மொழியில் தட்டுவதைப் பார்த்தேன். உன்னை அடையாளம் கண்டு பிடித்திருந்த நான் அதனால்தான் உனக்கு மெஸேஜ் கொடுத்துவிட்டு வெளியே செல்ல எழுந்தேன். தடுக்கி விழுவது போல் நடித்து, கடிதத்தை உன்னிடம் சேர்ப்பித்தேன்... ஆனால் எதிரி என்னைச் சும்மா விடுவதாக இல்லை.... அப்புறம் நடந்ததுதான் உனக்கே தெரியுமே?"

அவனது சாமர்த்தியத்தையும் துணிச்சலையும் அருண் மனத்துக்குள் பாராட்டிக்கொண்டிருக்கும்போதே, சத்யா தன் ஷர்ட்டின் பட்டனைக் கழற்றி, உட்புறப் பாக்கெட்டிலிருந்து சிறு டயரி ஒன்றை எடுத்து அருணிடம் கொடுத்தான்.

"இதுதான் நான் சொன்ன தகவல் களஞ்சியம். பத்திரம். நானே வந்து உன்னிடம் கேட்கும்போது கொடு. வேறு யாரிடமும் கொடுக்கக் கூடாது.... என் உயிருக்கு ஆபத்து நேர்ந்துவிட்டால், உனக்குத் தகவல் கிடைக்கும். அதன்பிறகு, டயரின் கடைசிப் பக்கத்தில் உள்ள முகவரியில் அதைச் சேர்ப்பித்து விடு.... புரிகிறதா?"

தலையாட்டினான் அருண்.

"சராகாவில் நீ...." என்று சத்யா சொல்ல ஆரம்பித்தபோது வீட்டின் பின்புறமிருந்து ஏதோ ஓசை எழுந்தது.

துள்ளியெழுந்தான் சத்யா. பாண்ட் பாக்கெட்டிலிருந்து துப்பாக்கியை உருவிக் கையிலெடுத்தபடியே, "யார் அது?" என்றான் அதட்டலாக.

அவனுக்குப் பதில் சொல்வது போல, அதுவரை எரிந்து கொண்டிருந்த விளக்கு சட்டென்று அணைந்தது.

"அருண்! க்விக்! நீ போய்விடு!" என்று அடிக் குரலில் சத்யா கட்டளையிட்டான்.

தெருப் பக்கத்திலிருந்து வந்த சோகை வெளிச்சம், வாயிற்படியை அவுட் லைன் போல் வரைந்து காட்ட, அருண் இருட்டில் தடுமாறாமல் நகர்ந்து வீட்டுக்கு வெளியே வந்தான்.

தெருவில் இறங்கி வேகவேகமாக அவன் நடந்தபோது, சத்யாவின் வீட்டில் துப்பாக்கிச் சப்தம் கேட்டது.

(தொடரும்)

# வாசகர்கள் சொல்கிறார்கள்

## சின்னச் சின்ன கனவுகள்

• சின்னச் சின்னக் கனவுகள் கதையில் பாண்டியனை அநியாயமாகச் சாகடித்து, இந்திராவை மறுபடியும் விதவைக் கோலமாக்கியதுதான் மனத் துக்குச் சங்கடமாக இருக்கிறது.

சிவகாசி, எஸ். பானுமதி.

• ஓர் அருமையான உணர்ச்சிக் காவியத்தை, தெள்ளத் தெளிந்த நீரோடையென எடுத்துச் சென்றிருந்தாலும், பாண்டியனை இந்திராவிடமிருந்து பிரித்தது, கொஞ்சம் மனத்தாங்கலைத்தான் தருகிறது.

சென்னை — 80, கே. என். ஸ்ரீநிவாஸ்.

• ஒவ்வொரு வாரமும் எதிர்பார்த்துப் படிக்க வைத்த கதை. 'சுபா'வோடு வாராவாரம் கதைக்கு உயிரூட்டிய ஓவியர் அரஸுக்கு எனது பாராட்டுக்கள்.

கோவில்வெண்ணி, கோ. ராஜேஷ்.

• கண் முன்னால் இருக்கும் மனிதர்களாகத் தோன்றினார்களேயன்றி, கதை மாந்தர்களாகச் சிறிதும் எண்ண முடியவில்லை, 'சின்னச் சின்னக் கனவு'களின் பாத்திரங்களை.

கோவை, உமார்த்தி.

• 'கலெக்டரு, கலெக்டரு' என நந்துவை ஆசையோடு அழைத்த தங்கராஜுவை மறக்க முடியாது. தங்கராஜுவின் கனவை நந்து 'கலெக்டர்' ஆகி நனவாக்கட்டும்! இருந்தாலும் இந்திராவிற்கு ஒரு வாழ்க்கைத் துணையைக் கொடுத்து, அவளது வாழ்வை மலரச் செய்த 'சுபா' ஏன் பாண்டியனைச் சாகடிக்க வேண்டும்? பாண்டியன், இந்திரா, நந்தகுமார் மூவரும் ஒன்றாகவிருந்தால் நாங்கள் மகிழ்ந்திருப்போம்.

திருத்துறைப்பூண்டி, ஜ. டேவிட்ஜான்பிரிட்டோ.





## மோகம் என்பது இதுதானோ?

• "மோகம் என்பது இதுதானோ?" தொடர்கதை அழகான குடும்பக் காவியம். ஞானம், லோகு, போன்ற விட்டில் பூச்சிகள் அரசியல், சினிமா என்ற விளக்குகளில் விழுந்து அழிந்து போகும் அவலத்தை உஷா சுப்பிரமணியன் மிகவும் யதார்த்தத்துடன் உயிரோட்டம் கொண்ட கதாபாத்திரங்களின் மூலம் அற்புதமாய்ச் சொல்லியிருக்கிறார். பாராட்டுக்கள்.

பொன்னியம்மன்மேடு, ஜெ. ரமாதேவிப்ரியா.

• புவனா என்னும் மலர் சந்தர்ப்ப சூழ்நிலையால் காமுகர் மடியில் விழுந்து விடுமோ என மடியில் நெருப்பைக் கட்டிக் கொண்டிருந்தேன். நல்ல வேளை! புவனா சரியான பாதையில் நடக்கத் துவங்கி விட்டாள்.

திருத்துறைப்பூண்டி, டி. டேவிட்ஜான்பிரிட்டோ.

• வாரம் தோறும் இடைவெளி விட்டுப் படித்து மகிழ்ந்தாலும், திரும்பவும் தொடக்கம் முதல் முடிவு வரை தொடர்ந்து விடாமல் படித்திட வேணும் என்று மனது துடிக்கிறது! ஒருவேளை, மோகம் என்பது(ம்) இதுதானோ?

மதுரை — 11, திருமதி சுகந்தி நாராயண்.

• தம் உயிரையே விலையாய்த் தந்து, அருமை மகளின் மோக வலையை, மேக வலையாய் விலகச் செய்து, அவளின் நல்வாழ்வுக்கு வழிவகுத்து விட்டார் சுந்தரம். மாருதியின் ஓவியங்களும் வாராவாரம் மெருகு சேர்த்தன.

காட்டூர், எஸ். அருண்மொழி

• "கள்ளி வயிற்றில் அகில் பிறக்கும்; மான் வயிற்றில் ஒள்ளரிதாரம் பிறக்கும்; பெருங்கடலுள் பல்விலையமுத்தம்பிறக்கும்; அறிவார்யார்நல்லாள் பிறக்குங்குடி" — என நான்மணிக்கடிகை கூறுகிறது. ஞானம் வயிற்றில் புவனா பிறந்ததும் இப்படித்தான் என்கிறாரோ கதாசிரியர்!

கல்யாணபுரம், அ. சம்பத்.

வறட்சியின் கொடுமையால் கால்நடைகளைக் கொண்டு கூடப் பிழைக்க முடியாமல், பல குடும்பங்கள் பட்டணம் நோக்கிச் செல்லும் பஸ்ஸுக்காக அன்றாடம் காத்திருக்கும் கொடுமையைப் பார்க்க வேண்டுமா? இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள கமுதி, கடலாடி, முதுகுளத்தூர்ப் பகுதிகளுக்குச் செல்லுங்கள்! இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள மொத்தம் சுமார் மூன்று லட்சத்துப் பத்தாயிரம் ஹெக்டேர் நிலப்பரப்பில், சுமார் இரண்டரை லட்சம் ஹெக்டேர் பரப்பு இயல்பாகவே வறண்ட பூமி. மக்களின் படிப்பறிவும் மிகக் குறைவு. சுமார் பன்னிரண்டு லட்சம் மக்கள் தொகையுள்ள இம் மாவட்டத்தில், எழுதப் படிக்கத் தெரிந்தவர்களின் எண்ணிக்கை சுமார் நான்கு லட்சம் தான். இதனால், மிகப் பெரும்பாலோர் குமாஸ்தா வேலைக்குக் கூட லாயக்கில்லை. ஆண்டுதோறும் குறையும் மழையளவால் கூலி வேலைக்கும் வழியில்லை. இந்நிலையில் மாவட்டம் முழுவதும் தலைவிரித்தாடும் குடிநீர்ப் பஞ்சமும் சேர்ந்து கொள்ளும் போது, அவர்கள் வேறு என்னதான் செய்வார்கள்?

ஆனாலும், இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள வறட்சி முழுக்க முழுக்க இயற்கையான வறட்சி அல்ல. பாதிக்குமேல் அரசின் திட்டமின்மையாலும் செயல்பாடின்மையாலும் தாண்டவமாடும் வறட்சிதான். கடந்த 80 இல் நமது சாட்டிலைட் எடுத்த படங்களை

* அதிகம் விளையும் பனை ஓலைகள்......



# வறட்சியைப் போக்க வழிகளா இல்லை?

ஆராய்ந்த போது, கமுதி, முதுகுளத்தூர் பகுதிகளிலுள்ள பதினைந்து இடங்களில் நல்ல குடிநீர் கிடைக்க வாய்ப்பிருக்கிறதென்றும் அதேபோல் திருவாடானை பகுதியில் ஆயிரத்து ஐந்நூறு அடிக்கு மேல் ஆழ்குழாய்க் கிணறு தோண்டினால் அற்புதமான குடிநீர் கிடைக்க வாய்ப்பிருப்பதாகவும், இவற்றைச் செயல்படுத்தினால் இராமநாதபுரம் மாவட்டத்தின் குடிநீர்ப் பிரச்னையின் தொண்ணூறு சதவிகிதத்தைத் தீர்த்து வைத்துவிட முடியுமென்றும் கூறுகிறார் கலெக்டர் திபேந்திரநாத் சாரங்கி. ஆனால், ஆட்சிப் பொறுப்பில் உள்ளவர்கள் இதுபற்றிச் சிந்திப்பதாகவே தெரியவில்லை.

இதேபோல் இராமநாதபுரம் மாவட்டத்தில் சுமார் ஆயிரத்து எண்ணூறு கண்மாய்கள் இருந்தும், விவசாயம் அரிதாக இருப்பதற்கு என்ன காரணம்? மழையளவு குறைந்து போனது மட்டுமல்ல காரணம். ஒவ்வொரு கண்மாயிலும் அரசியல்வாதிகளும், அவர்களின் ஆதரவு பெற்றவர்களும் கண்ணை மூடிக் கொண்டு ஆக்கிரமிப்புச் செய்திருக்கிறார்கள். மழைக்காலத்தில் அவற்றில் தண்ணீர் தேங்கும் போது, தங்களின் ஆக்கிரமிப்புப் பகுதிகள் தண்ணீரில் மூழ்குவதால், அதைத் தடுக்கத் தண்ணீரைத் திறந்துவிட்டுவிடுகிறார்கள். அதனால்



* முனியாண்டி

# பொன்மொழிப் போட்டி-4 முடிவு

(சென்ற இதழ் தொடர்ச்சி)

295. நீலா ராமச்சந்திரன், மேட்டூர் அணை; 296. எல். ரேவதி, திருச்சி—4 ; 297. ஜெ. மோகனகிருஷ்ணன், திருச்சி—4 , 298. கே. புவனேஸ்வரி, அண்டம்பள்ளம்; 299. பி.ஆர்.பி. சங்கர், சென்னை—29: 300. என். நித்யா, சென்னை—85; 301. கிட்டா, நாகர்கோவில்; 302. பி. ராமமூர்த்தி, சென்னை—44 ; 303. சாந்தி உமாசங்கர், திருச்செங்கோடு: 304. வி. வசந்தா, புதுதில்லி—64 ; 305. கே. ரங்கநாதன், பாண்டி—4 , 306. எஸ். செந்தமிழ்ச் செல்வி, ஈரோடு—3; 307. பி. சித்ரா தேவி, கோவை; 308. சி. கிருஷ்ணமூர்த்தி, திருச்சி—4 ; 309. என். கிருஷ்ணமூர்த்தி, ஏ. தெக்கூர்; 310. என்.எஸ். லலிதா, திருச்சி—2; 311. எஸ். ரமேஷ், மதுரை—16; 312. எஸ். சண்முகராஜ், சென்னை—79; 313. லலிதாகல்யாணராமன், சென்னை—44 ; 314. கே. எம். ரவிச்சந்திரன், மதுரை—20; 315. எஸ். செல்வராஜ், தேவகோட்டை; 316. பி. கமலா, முடிகொண்டான்; 317. ஆர். எஸ். ராஜன், ஸ்ரீரங்கம்; 318. ஆர். ரங்காச்சாரி, சேலம்—6; 319. எஸ்.வி. நாகராஜன், திருச்சி—14 ; 320. ஆர். லக்ஷ்மி நாராயணன், கோவை—37; 321. சி. ரமேஷ் குமார், நாமக்கல்; 322. எஸ். ரமேஷ் குமார், போடிநாயக்கனூர்; 323. அரங்கநாயகி, சென்னை—4 ; 324. எம். சௌந்தரராஜன், ஈரோடு—2; 325. வ. கனகசபை, நல்லிக்கோட்டை; 326. எஸ். வெங்கட்ரமணன், சென்னை—44 ; 327. பி. ராஜசேகரன், திரு. பம்பாய்; 328. எஸ். அருள்சாமி, கணபதிபுரம் (குமரி); 329. க. அரங்கநாதன், சேலம்—1; 330. இரா. சம்பத்குமார், இராசிபுரம்; 331. ச. ராஜசேகரன், சென்னை—30; 332. ஆர். பிரேமலதா, போளூர் (வ.ஆ.); 333. சங்கரி, சென்னை—28; 334. என். உஷா, திருப்பத்தூர். 335. பி.கே. செல்லப்பா, சென்னை—78; 336. வி லக்ஷ்மணன், சென்னை—4 ; 337. சுமதி வரதராஜன், சென்னை—2; 338. சி.தெ. இளமுருகன், சென்னை—39; 339. ஆர். ஹேமாம்புஜம், திண்டுக்கல்; 340. ஜெ. பகபதீஸ்வரன், ஈரோடு—11; 341. சொ. தோத்தாத்ரி, கோட்டை (627112); 342. என். கருணை ஈஸ்வரி, பெங்களூர்—10; 343. ப. தங்கவேல், பொள்ளாச்சி; 344. வி. வேணுகோபாலய்யர், பாபநாசம் (தஞ்சை); 345. ரா. ஜெயராமன், புட்பவனம்; 346. வசந்தா, திருச்சி—12; 347. சி. மாசிலாமணி, சேலம்—15; 348. ஏ. குருராகவேந்திரா, ஈரோடு—2; 349. பி. அருள்மணி, பெங்களூர்—50; 350. டி. ராஜன், பம்பாய்—17; 351. லட்சுமி சங்கர், பம்பாய்—93; 352. எஸ். ரமாதேவி, தர்மபுரி; 353. டி. சுவாமிநாதன், சிதம்பரம்—1; 354. ராஜலட்சுமி, புஞ்சைப்புளியம்பட்டி; 355. மா. முத்துக் கருப்புசாமி, திருச்சி—20; 356. என். வெங்கடசாமி, சேலம்—2; 357. எஸ். சிதம்பரவல்லி, தூத்துக்குடி; 358. வி. சஞ்சீவி, பள்ளிபாளையம், 359. சுகுந்த குமார், பம்பாய்; 360. டி. சாந்தி, புதுக்கோட்டை; 361. பி. கிருஷ்ணமூர்த்தி, மதுரை—18; 362. கே. ராஜா ரவீந்தர், சாக்கோட்டை; 363. ந. ராணி, அரிமலம்; 364. என். சம்பந்தம், குறிஞ்சிப்பாடி; 365. எஸ். நாராயண குமார், நாகர்கோவில்—2; 366. எஸ். அனந்தராமன், தூத்துக்குடி—2; 367. ஆர். தேன்மொழி, சீர்காழி; 368. கே., அமிர்தவல்லி, சிதம்பரம்; 369. கே. ராமலிங்கம் கோனூர்பாளையம் (638187); 370. கதா சீனிவாசன், பம்பாய்—19; 371. என். சிவன்பிள்ளை, நாகர்கோவில்; 372. கா. ந. மோகன், காவேரிப்பட்டினம்; 373. ஜி. அந்தோனிப்பி, தெற்கு ராமலிங்க நகர் (முழு விலாசம் இல்லை); 374. எஸ். திருமலை, குறிஞ்சிப்பாடி; 375. சரோஜினி ஸ்ரீனிவாசன், பெங்களூர்—10; 376. ஆர். வேணுகோபால், இயாகதுருகம்; 377. இரா. சேகர், சேலம்—1; 378. எஸ். முரளி, பரங்கிப்பேட்டை; 379. வே. மதிமாறன், சென்னை—57; 380. என். ஸ்ரீனிவாசன், சென்னை—61; 381. டி.வி. விஜயா,

தான் சராசரி விவசாயம் கூடப் பாதிக்கப்படுகிறது. இந்நிலையை அகற்றினாலே சுமார் இருபத்தைந்து சதவிகித வறட்சியைக் குறைக்க முடியும் என்கிறார்கள் விவரமறிந்த மக்கள்.

இவற்றோடு, இராமநாதபுரம் மாவட்டத்தில் கிடைக்கும் மழையளவிலேயே பயிராகிப் பயன் கொடுக்கும் பனைத் தொழிலும் தென்னைத் தொழிலும் அரசாங்கத்தால் ஊக்குவிக்கப் படாததுதான்



* சடாச்சரம்

இம்மாவட்டத்தின் மிகப் பெரிய சாபக்கேடு. பனை ஓலைப் பாய்களை வாங்கி விற்கும் வியாபாரியான சடாச்சரத்தைச் சந்தித்த போது, "இந்தப் பனை ஓலைப் பாய்களைக் கொண்டுதான் வெல்லம், கருவாடு போன்றவற்றைப் பார்சல் செய்கிறார்கள். இதோடு கோவையிலுள்ள தியாகராஜா டெக்ஸ்டைல் மில்லும், மகாராஷ்டிரத்திலுள்ள டெக்ஸ்டைல் மில்களும் பனை ஓலைப் பாய்களைக் கொண்டுதான் துணிகளைப் பார்சல் செய்கின்றன. ஆனால், தமிழக அரசு சம்பந்தப்பட்ட மில்களில் பனை ஓலைப் பாய்களை உபயோகிப்பதேயில்லை. அரசே இப்படிச் செய்யலாமா? இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள மக்களில் சுமார் ஒரு லட்சத்திற்கும் மேற்பட்டவர்கள் பனை ஓலைப் பாய் முடையும் தொழில் மூலம்தான் ஜீவனம் நடத்திக் கொண்டிருக்கிறார்கள். இந்நிலையில் அரசு இதை ஊக்குவிக்காததுதான் ஆச்சரியமாக இருக்கிறது" என்றார்.

இராமநாதபுரம் — மதுரை மாவட்டப் பனை வெல்லக் கூட்டுறவு விற்பனை சம்மேளனத்தின் மேலாளர் முனியாண்டியிடம் பேச்சுக் கொடுத்துத் துருவித் துருவிக் கேட்ட போது, அவரும் அரசு சம்பந்தப்பட்ட மில்

காந்திகிராமம் (அண்ணா); 382. டி.வி. சுப்புலட்சுமி, காந்திகிராமம்; 383. ம. உஷா, திருச்சி—20; 384. வி.ஆர். பொன்னம்பலம், தூத்துக்குடி—1; 385. பி.எஸ். கோமதி, சென்னை—75; 386. என். கமலம்மா, ராணிப்பேட்டை; 387. க.க. சரவணன், தஞ்சை—1; 388. கீதா ரவி, சேலம்—7; 389. எஸ். சண்முகம், சென்னை—8; 390. கே. குளத்துரான், நெல்கட்டும் செவல் (நெல்லை); 391. வி. திரிபுரசுந்தரி, சென்னை—4; 392. கு. கணேசன், சென்னை—15; 393. சந்திரா விஸ்வேஸ்வரன், ஆழப்புழை (கேரளா); 394. ஆர். விசாலாட்சி, பம்பாய்; 395. கி. ரங்கராஜன், சென்னை—75; 396. எஸ். நாராயணன், கோவை—4; 397. எம். நல்லகாமன், திண்டுக்கல்; 398. மா. இராக, பரமக்குடி; 399. எஸ். ஜெ. இதயா, மதுரை—20; 400. த. ஜெயக்குமார், கொப்பம்பட்டி, 401. சி.மோ. கிருஷ்ணஸ்ரீ, பிர்லாபூர் (மே. வங்கம்); 402. சி. ஸ்ரீநிவாஸன், இராமநாதபுரம்; 403. எஸ். ராமசாமி, மேட்டுப்பாளையம்; 404. க. வெங்கடேசன், வைத்தீஸ்வரன் கோவில்; 405. ரமா பரமேஷ்; பெங்களூர்—42; 406. எஸ். சம்பத், ஸ்ரீவைகுண்டம், 407. எஸ். சொக்கலிங்கம், காட்டூர்; 408. பா. ரமணி, அவனியாபுரம்; 409. எம்.வி. துரைராக, கீழவாடி பயக்காடு, (தஞ்சை); 410. ஏ. நாராயணன், பெங்களூர்—48; 411. டி. ராமதாஸ், அணைக்கரை; 412. எம்.ஜெ. மார்டின், அனந்தநாடார்குடி (குமரி); 413. சோ. சுந்தரி மோகன், தூத்துக்குடி—2; 414. கே. டி. நீலகண்டன், மைசூர்—14; 415. ஜி. சுப்புலட்சுமி, அனந்தபூர் (ஆந்திரா); 416. பாலா அசோக், திருச்சி—1; 417. எம். கனகரத்தினம், சிவகாசி; 418. ஏ. மாலா, குடியாத்தம், 419. ஏ.என். சேஷாத்ரி, முனிராபாத் (கர்நாடகா); 420. ரேவதி யுவராஜன், சோளங்கபாளையம்; 421. இ.க. இராமகிருஷ்ணன், பாளை; 422. எஸ். கற்பகவல்லி, திருவனந்தபுரம்; 423. கே. மணியன், பி. புளியம்பட்டி; 424. எஸ். தனலட்சுமி, சென்னை—40; 425. ஏ.டி. நரசிம்மன், சென்னை—8; 426. ஏ. ஆர். ஸ்ரீராமுலு, சொக்கம்பாளையம்; 427. கே. ஷோபனாகாந்தி, சென்னை — 38; 428. வி. இந்திரா, புதுதில்லி—48; 429. திருமதி ஜரீன் முகமதலி, ஆத்தூர் (சேலம்); 430. அ. மங்களநாதன், மதுரை—2; 431. எஸ். பத்மநாபன், சென்னை—28; 432. ஏ. பாலாஜி, சென்னை—12; 433. இ.எஸ். பட்டப்பா, ஸ்ரீரங்கம்; 434. கி. மணிகண்ட பிரபு, இராஜபாளையம்; 435. மு. தையல்நாயகி, பண்ருட்டி; 436. கே.ஆர். பவானி, கும்பகோணம், 437. கே. ஜெயலெட்சுமி, மயிலாடுதுறை; 438. இரா. ப. பிரபாகரன், தஞ்சை—2; 439. பி.வி. இராகவன், சேலம்—8; 440. நந்தினி ஷர்மா, சென்னை—80; 441. டி. ஆர். சங்கீதா, சேலம்—5; 442. என். சடகோபாசாரி, ஸ்ரீரங்கம், 443. என். ஈஸ்வர் ஆனந்த், சென்னை—33; 444. வி. ராஜேஷ், திருத்தணி; 445. வெ. உஷாராணி, பொன்னேரி; 446. வி. சுவாமிநாதன், குற்றாலம் (தஞ்சை); 447. எஸ். சேதுபதி, காரைக்குடி; 448. எம்.கே. வஸந்த பிரேமகுமாரி, சிவகங்கை; 449. இரா. லெட்சுமி, திருத்துறைப்பூண்டி; 450. ஜெயலட்சுமி ஜயராம், பம்பாய்—74; 451. ரா. நிஹால் பெட்ரிக், புதுதில்லி—67; 452. எம். கிரிஜா சுந்தரம், மதுரை—1; 453. லட்சுமி ராகவன், நாக்பூர்; 454. விஜய பாஸ்கர், ஆற்காடு, (வ.ஆ.); 455. எஸ். காயத்ரி, சென்னை—88; 456. செ. ஸ்ரீதர், வி. கரிசல்குளம்; 457. ஜி. முத்துக்குமரன், நெல்லை—7; 458. எஸ். கோகுலகிருஷ்ணன், திருக்கோகர்ணம், 459. க. வள்ளியப்பன், சென்னை—32; 460. மைதிலி கிருஷ்ணன், சென்னை—83; 461. காந்திமதி, ஹைதராபாத்—47; 462. எஸ். தனபாலன், திருவாரூர்; 463. எஸ். ராஜலட்சுமி, மச்சுவாடி; 464. கீதா துஷ்யந்தன், மதுரை—14; 465. எஸ். வெங்கடேசன், பம்பாய்—1; 466. இரா. கிரி, தூத்துக்குடி—2; 467. ஜெ.எஸ். மீனாட்சிசுந்தரம், நெல்லை—1; 468. இந்திரா, பம்பாய்—22; 469. பி. சாவித்ரி ஸ்கந்தாலயா, சேலம்—7; 470. மோகன் ராஜு, நியூ பம்பாய், 471. கிருஷ்ணவேணி ராமமூர்த்தி, சென்னை—17; 472. எஸ். கௌசல்யா தேவி, மதுரை—9.

(சரியான விடை எழுதப்பட்ட கூப்பன்கள் மொத்தம் 474. அதில் இருவர், ஒவ்வொருவரும் இரண்டிரண்டு கூப்பன்கள் அனுப்பியுள்ளதால், அவற்றைக் கழித்து விட்டோம்.)

களில் பனை ஓலைப் பாய்களை உபயோகப் படுத்த ஆரம்பித்தால் ஆண்டுக்குச் சுமார் நான்கு லட்சம் ரூபாய்க்கு மேல் அதிகப் பாய்கள் விற்பனையாகும் என்பதை ஒப்புக் கொண்டார். இந்நிலையிலும் அரசு மில்கள் கவர்ச்சி கருதிப் பனை ஓலைப் பாய்களுக்குப் பதில் பாலிதீன் பேப்பர்களை உபயோகிப்பதுதான் நம்மைச் சந்தேகிக்க வைக்கிறது.

இதேபோல்தான் தென்னைத் தொழிலும். இம்மாவட்டத்தில் ஏராளமாகத் தென்னை மட்டைகள் கிடைத்தும் அவற்றிலிருந்து நார் எடுக்கும் தொழிற்சாலைகள்தான் இருக்கின்றனவே தவிர, கயிறு திரிக்கும் தொழிற்சாலைகள் ஏதும் இல்லை. (அட்டையில் தென்னை மட்டை நார் எடுக்கும் தொழிற்சாலையில் பணிபுரியும் பெண்கள்) இங்குள்ள நார்களை வெளி மாவட்டத்துக்காரர்கள் வாங்கிச் சென்று கயிறு திரித்து விற்கிறார்கள். அதை ஏன் இங்கேயே செய்யக்கூடாது? இவற்றோடு இராமநாதபுரம் கடற்கரையோரப் பகுதிகளில், பாமாயில் தயாரிக்கப் பயன்படும் பனைகள் வளர வாய்ப்பிருக்கும் ஒரு சூழ்நிலையிலும் அரசு அது சம்பந்தமான தீவிர நடவடிக்கைகளில் இறங்காமலிருப்பதற்கும் என்ன காரணம் என்பதுதான் நமது கேள்வி.

மேலும் மண்டபம் பகுதிகளில் மல்லிகை அதிகம் பயிராகிறது. அதை ஊக்குவிக்கும் வகையில் மல்லிகை சென்ட் தயாரிக்கும் தொழிற்சாலை ஒன்றும் துவக்கலாம். ஏராளமாகக் கிடைக்கும் கடல் பொருள்களைக் கொண்டு, சங்கு வளையல்கள், காதணிகள், மாலைகள் போன்றவற்றைத் தயாரிக்கும் தொழிற்சாலையும் துவக்கலாம். கிளிஞ்சல்களைக் கொண்டு சுண்ணாம்பு தயாரிக்கும் தொழிற்சாலையையும் துவக்கிப் பலருக்கு வேலை வாய்ப்பளிக்கலாம். ஆனால் அரசோ, மண்டபத்தில் தொடங்கப்பட்ட முத்து நிறுவனம் மூடப்பட்டதைக் கூடக் கண்டு கொள்ளாமல் இருக்கிறது.

இந்நிலையில் 'வறட்சி வறட்சி' என்று வயிற்றிலடித்துக் கொண்டு ஒப்பாரி வைப்பது, நமது அரசின் போலித்தனமே அல்லாமல் வேறில்லை. அங்கங்கே கிடைக்கும் மூலப்பொருள்களையும் வாய்ப்பையும் ஒழுங்காக ஆராய்ந்து, அவற்றை முழுமையாகப் பயன்படுத்திக் கொண்டாலே தொண்ணூறு சதவிகித வறட்சி இருந்த இடம் தெரியாமல் ஓடிப் போய்விடும் என்பது உறுதி.

— நமது நிருபர்

மிஞ்சமுடியாதது தகர்க்க முடியாதது ஈடு இணையற்றது

# இன்ட்டர்நேஷனல் டூரிஸ்ட்டர்





# அமரர் கல்கி

# நினைவுச் சிறுகதைப் போட்டி – 1987

| | | |
|---|---|---|
| முதல் பரிசு | ரூ | 1500 |
| இரண்டாவது பரிசு | ரூ | 750 |
| மூன்றாவது பரிசு (இரு கதைகளுக்குத் தலா ரூ 375 வீதம்) | ரூ | 750 |

ஆக மொத்தம் ரூ 3000 பரிசுகளாக வழங்கப் பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ 125 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

- கதைகள் சொந்தக் கற்பனை என்றும், இதற்கு முன் வேறு எந்த உருவிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும்வரை எழுத மாட்டேன் எனவும் உறுதி மொழி தர வேண்டும்.
- நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

**கதைகளை அனுப்ப வேண்டிய கடைசி தேதி: ஜூன் 15**

- உறையின் மேல் அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுயவிலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் கல்கி ஆகஸ்டு 2 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.
- எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

ஆசிரியர், கல்கி, சென்னை-600 034.

# புதுமடத்தில் எல்லாமே பழசு!

இராமநாதபுரம் — மண்டபம் நெடுஞ்சாலையில் உள்ள உச்சிப்புளி என்ற ஊரிலிருந்து பிரிந்து நான்கு கி. மீ. தூரம் சென்றால் புதுமடம் என்னும் ஊர்.

ஊருக்குள் நுழையும் போது, ஏதோ சரித்திரப் புத்தகத்தில் நுழைந்து விட்டது போல் ஒரு பிரமை. தெருக்கள், சாலைகள் எதிலும் தார் போட்டு மூடப்படாத கடற்கரை மணலின் இயற்கை அழகு. அதுவே வாகனங்களுக்கு 'நோ என்ட்ரி' என்று சொல்லிவிட்ட நிலை. இளைஞர் விளையாட்டுக் கழகத்தைச் சேர்ந்த அப்துல் வஹாத், ''முதல்ல எங்க ஊர் ஸ்கூலைப் பார்க்கலாம், வாங்க சார்'' என்றார்.

ஒரு மர்மக்கதைக்குரிய திடீர்த் திருப்பங்களுடன் பாதை வளைந்து வளைந்து கொண்டு போய், ஓர் இடத்தில் விட்டது.

பாழடைந்த ஒரு மண்டபம். யாரோ குழந்தை வரம் கேட்ட ராஜா பல நூற்றாண்டுகளுக்கு முன்னால் கட்டி வைத்த தர்மச்சத்திரமாம். ஒளிவு மறைவில்லாத ஜன்னல்கள்.

''இப்படி வாங்க சார், இதான் கதவு...''

உள்ளே நுழைந்தால், பெயர்ந்து போன தரைகள். வௌவால்களின் கட்டணமில்லாக் கழிப்பிடம். வயிற்றைக் குமட்டும் துர்நாற்றம். இடையிடையே தலைநீட்டியுள்ள காட்டுச் செடிகள். காரை உதிர்ந்த கரும் பலகைகள். பெஞ்சுகள் போன்ற 'அநாவசியங்கள்' இல்லை; எந்த நேரத்திலும் இடிந்து விழுவேன் என்று பயமுறுத்திக் கொண்டேயிருக்கும் சுவர்கள்.... இங்கு உட்கார்ந்து தான் படிக்க வேண்டுமா?— ஐயோ, புதுமடம் மாணவர்கள் மகா பொறுமைசாலிகள்! ஆமாம், அதுதான் அறுநூற்றைம்பது மாணவ, மாணவியர் படிக்கும் புதுமடம் துவக்கப் பள்ளியாம்!

''மந்திரி இராமசாமி வந்து பார்த்திட்டு, உடனே வேறு கட்டடத்துக்கு ஏற்பாடு செய்யறேன்னு போனாரு. போய் ஒரு வருஷம் ஆகுது. இதுவரைக்கும் மூச்சுப் பேச்சு இல்லை. எங்க ஊர் ஆஸ்பத்திரியையும் நீங்க அவசியம் பார்க்கணும்...''

''மறுபடியும் திருப்பங்கள். காம்பவுண்டு சுவர்... உள்...ளே மருத்துவமனையின் துருப்பிடித்த போர்டு. மணல் மூடிய பாதை.

டாக்டர் பெரியதம்பி புன்முறுவலோடு பதில் சொன்னார்.

''இந்த ஆஸ்பத்திரில நெறைய பிரச்னைங்க இருக்கிறது உண்மைதான். முதல்ல ஒரு ஆம்புலன்ஸோ, ஜீப்போ வர முடியாது. ஏன்னா அப்ரோச் ரோடே கெடையாது. அவசரத்துக்கு எக்ஸ்ரே, ரத்தப் பரிசோதனை எதுக்கும் இங்கே வசதி கிடையாது. மொத்தம் பத்துப் படுக்கைகள். என்னைத் தவிர ஒரு பெண் டாக்டர் உண்டு. சாதாரண காய்ச்சல் போல இருந்தா, இங்கே பாக்கலாமே தவிர, கொஞ்சம் சீரியஸ்னு வந்தாக் கூட இருபத்து நாலு கிலோ மீட்டர் தள்ளி இராமநாதபுரத்துக்குத்தான் எடுத்திட்டுப் போகணும். பெரிய வசதிங்களை விடுங்க, குடிதண்ணிக்குக் கூட இங்கே வசதி இல்லை...''

ஆயிரக்கணக்கில் மக்கள் வசிக்கும் ஓர் ஊருக்கு இந்த அடிப்படை வசதிகள் கூட இல்லை என்றால் எப்படி?

— நமது நிருபர்



• புதுமடம்; இதுதான் வகுப்பறையாம்!



• டாக்டர் பெரியதம்பி.

• அப்துல் வஹாத்



• கலெக்டர் திபேந்திரநாத் சாரங்கி

# "இராமநாதபுரம் வறட்சிக்கும் நிரந்தரத் தீர்வு காண முடியும்!"

## கலெக்டர் பேட்டி

இராமநாதபுரம் மாவட்டக் கலெக்டர் திபேந்திரநாத் சாரங்கியை நாம் பேட்டி கண்டபோது, அவர் அப்பதவியிலிருந்து மாற்றல் செய்யப் பட்டிருந்தார். அவர் அங்கு கலெக்டராகப் பொறுப்பேற்று இயங்கியதும் வெறும் ஒன்பது மாத காலம்தான். இந்நிலையிலும் அவர் நமது பேட்டியைத் தட்டிக் கழிக்காமல் ஒப்புக் கொண்டதோடு, சம்பந்தப்பட்ட பல்வேறு துறைகளிலிருந்தும் முப்பதுக்கு மேற்பட்ட ஆபீஸர்களைப் பேட்டியின் போது உடனிருக்கச் செய்து, தாம் மாற்றலாகிப் போனாலும் சம்பந்தப்பட்ட குறைகளுக்குச் சம்பந்தப்பட்ட ஆபீஸர்களைத் தொடர்ந்து நடவடிக்கை எடுக்கச் சொன்னார். பேட்டி ஆரம்பமானது......

**கல்கி:** இராமநாதபுரம் மாவட்டம் என்றாலே வறட்சி மாவட்டம் என்றுதான் சொல்வார்கள். அந்த அளவுக்கு மாவட்டம் முழுமையும் குடிநீர்ப் பஞ்சம். கிடைக்கும் குடிநீரும் நல்ல குடிநீராக இருப்பதில்லை. இதற்கு என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது?

இராமநாதபுரம் மாவட்டக் கலெக்டர் திபேந்திரநாத் சாரங்கி: கூட்டுக் குடிநீர்த் திட்டத்தின் மூலம் பெருமளவு பிரச்னைகளைச் சமாளித்துக் கொண்டுதான் வருகிறோம். ஆனாலும் இது நிரந்தரத் தீர்வு அல்ல. கடந்த எண்பதாம் ஆண்டு நமது சாட்டிலைட் மூலம் எடுக்கப்பட்ட புகைப்படங்களிலிருந்து இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள முதுகுளத்தூர், கமுதி பகுதிகளில் சுமார் பதினைந்து இடங்களில் நல்ல நிலத்தடி நீர் கிடைக்க வாய்ப்பிருப்பதாக மத்திய விண்வெளி ஆராய்ச்சிக் கழகம் தெரிவித்துள்ளது. அதற்கான ஆய்வுகள் நடந்து வருகின்றன. இதோடு திருவாடானைப் பகுதியில் ஆயிரத்து ஐந்நூறு அடி ஆழத்திற்கு மேல் ஆழ்குழாய்க் கிணறு தோண்டினால் நல்ல நீர் கிடைக்குமென்றும், அதன் மூலம்

மாவட்டம் முழுமையும் சுமார் தொண்ணூறு சதவிகிதக் குடிநீர்ப் பிரச்னையைப் போக்க முடியுமென்றும் ஆய்வுகள் சொல்லுகின்றன. நிதி வசதி போதுமான அளவுக்குக் கிடைத்தால் இத்திட்டங்களைச் செயல்படுத்துவதன்மூலம் இம்மாவட்டத்தின் வறட்சிக்கு நிரந்தரத் தீர்வு காண முடியும்.

கல்கி: இப்போது கிடைக்கும் குடிநீர் மற்ற மாவட்டங்களை விட அதிகக் கடினத் தன்மையுடன் இருப்பதால், அதன் மூலம் நோய்கள் ஏதேனும் வருகின்றனவா?

கலெக்டர் (மாவட்ட சுகாதார அலுவலரைப் பார்க்க அவர் பதில் சொல்கிறார்): குடிநீரின் மூலம் சில நோய்கள் வருவது உண்மைதான். அதைத் தடுப்பதற்கான நடவடிக்கைகளையும் எடுத்துக் கொண்டுதான் வருகிறோம்.

கல்கி: இந்தமாவட்டம்மிகவும்பின்தங்கிய மாவட்டம். ஆயினும்குறிப்பிட்டுச் சொல்லக் கூடிய அளவுக்குத் தொழிற்சாலைகள் ஏதும் இல்லை. மக்கள் அறவே விவசாயம் செய்ய இயலாத சூழ்நிலையில் தொழிற்சாலைகள் துவங்கப்பட வேண்டாமா?

கலெக்டர்: இதுவரை 5.24 கோடி ரூபாய் சிறு தொழில்களின் வளர்ச்சி கருதி முதலீடு என்ற முறையில் செலவிட்டிருக்கிறோம். சுயவேலை வாய்ப்புத் திட்டத்திற்காக ஆயிரத்து அறுநூறு பேருக்குக் கடன் வழங்கியிருக்கிறோம். பனை, தென்னை தொடர்பான தொழில்களுக்கும் ஊக்கம் கொடுத்துக் கொண்டுதான் இருக்கிறோம். கடல் பொருள்களைக் கொண்டு சங்கு வளையல்கள் தயாரிக்கும் தொழில்களையும் பெரிய அளவில் ஆரம்பிப்பதற்கான ஆய்வுகளை மேற்கொண்டிருக்கிறோம்.

கல்கி: இங்கு அதிக அளவில் கிடைக்கும் பனை, தென்னைப் பொருள்களைக் கொண்டே ஓலைகள், கயிறுகள் போன்றவற்றை உற்பத்தி செய்யும் தொழிலைப் பெருமளவில் செய்யலாமே?

கலெக்டர்: ஏற்கெனவே பனை பொருள்களுக்கான கூட்டுறவுச் சங்கங்கள் நிறுவப்பட்டுள்ளன. தென்னை மட்டை நார்களைக் கொண்டு கயிறு திரிக்கும் தொழிற்சாலைகளை நிறுவவும் ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன. இவற்றோடு கற்றாழை நாரைக் கொண்டும் பெருமளவில் பொருள்களை உற்பத்தி செய்ய ஊக்கம் அளித்துக் கொண்டு தான் வருகிறோம்.

கல்கி: பனை ஓலைகள் முடைவோரைச் சந்தித்தபோது, தமிழக அரசு தொடர்பான டெக்ஸ்டைல் மில்களோ இப்போது துணிகளைப் பார்சல் செய்யப் பனை ஓலைகளைப் பயன்படுத்துவதில்லை. மகாராஷ்டிரத்தில் தான் பெருமளவு உபயோகப்படுத்துகிறார்கள். தமிழக அரசும் உபயோகப்படுத்தினால் இன்னும் பல லட்சம் ரூபாய்களுக்கான ஆர்டர் கிடைக்கும் என்றார்கள்....

கலெக்டர்: இதுபற்றிய முடிவை அரசு தான் எடுக்க வேண்டும்.

கல்கி: பாமாயில் போன்ற எண்ணெய் வகைத் தயாரிப்புக்கு உதவும் வகையில் கேரளாவில் 3,700 ஹெக்டேர் நிலத்தில் பனைமரங்கள் பயிரிடப்பட்டுள்ளதாக அண்மையில் யோகேந்திர மக்வானா லோக்சபையில் தெரிவித்துள்ளார். அந்தப் பனைகளை இராமநாதபுரத்திலும் பயிரிடலாமே?

கலெக்டர்: அந்தப் பனைக்கும் சாதாரணப் பனைக்கும் வேறுபாடுகள் உண்டு. அவை சாதாரணப் பனைகள் வளரும் இடத்திலெல்லாம் வளர்ந்துவிடும் என்று சொல்ல முடியாது. ஆயினும் இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள கடலோரப் பகுதிகளில் அவை வளர வாய்ப்பிருப்பதாகத் தெரிகிறது. வாய்ப்புள்ள இடங்களில் கண்டிப்பாகப் பயிரிடப்படும்.

கல்கி: தமிழக அரசும் ஸ்பிக் நிறுவனமும் இணைந்து ஆரம்பித்த தமிழ்நாடு முத்து நிறுவனம் மூடப்பட்டதற்கு என்ன காரணம்?

கலெக்டர்: அதுபற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. நீங்கள் அதுபற்றி அரசிடம்தான் கேட்க வேண்டும்.

கல்கி: வைகையாற்றுப் படுகையில் குடிநீர் வசதி இருந்தும் பரமக்குடியில் குடிநீர்ப் பஞ்சம் ஏன்?

கலெக்டர்: வைகையாற்றுப் படுகையிலிருந்து பரமக்குடிக்குக் குடிநீர் வழங்கும் திட்டம் முடிவடைந்துவிட்டது. வரும் தமிழ்ப் புத்தாண்டு தினத்திலிருந்து அது செயல்படும்.

கல்கி: பரமக்குடி அரசு மருத்துவமனை இன்னும் விரிவுபடுத்தப்பட வேண்டும் என்கிறார்கள்.......

கலெக்டர் (மாவட்ட மருத்துவ அலுவலர் ஆர். என். சடையப்பனைப் பார்க்க அவர் சொல்கிறார்): நான் நேரில் சென்று பார்க்கிறேன். நியாயமான விரிவாக்கம் செய்யப்படும்.

கல்கி: பரமக்குடி அருகிலுள்ள வல்லம் கிராமத்திலுள்ள வீடுகளில் பல இன்னமும் மின் இணைப்புப் பெறவில்லை. வொயரிங் வேலைகளை முடித்துச் சுமார் மூன்றாண்டுகளுக்கு மேலாகியும் இன்னும் இணைப்புக் கொடுக்கப்படவில்லை என்கிறார்கள்...

கலெக்டர் (மின்துறை ஆபீஸர்களைப் பார்க்கஅவர்கள் சொல்கிறார்கள்): புதிதாகக் கம்பம் நட்டுக் கொடுக்கப்பட வேண்டியிருந்தால்தான் தாமதமாகும். மற்றபடி எல்லா ஊர்களுக்கும் தெருவிளக்குகள் போடப்பட்டிருக்கின்றன.

கல்கி: தெரு விளக்குகள் இருக்கும் போது வீடுகளுக்கு மின் இணைப்புத் தரப் புதிதாகக் கம்பம் நடும் பிரச்னையே எழாதே!

மின்துறை அலுவலர்கள்: மின் அழுத்தம் போதுமானதாக இல்லாததால், சில இடங்களில் இப்படித் தாமதமாவதும் உண்மையே.



• பேட்டியின் போது கூடவிருந்த ஆபீஸர்களில் ஒரு பகுதியினர்......

கல்கி: இம்மாவட்டத்தில் பெரிய கனரகத் தொழில்களும் இல்லை. விவசாயமும் சரியானபடி இல்லாத நிலையில் மின் அழுத்தம் குறையவும் வாய்ப்பில்லையே!

கலெக்டர்: இன்னும் உபமின் நிலையங்கள் அமைக்கப்பட வேண்டும். இப்போதுள்ள உப மின்நிலையங்கள் போதுமானதாக இல்லை. நீங்கள் குறிப்பிடும் இடங்களைக் கவனிக்கச் சொல்கிறேன்.

கல்கி: திருவேகம்பத்து அருகிலுள்ள அனிக்கனேந்தல் கிராமத்திற்குச் சாலை வசதியே இல்லை. பஸ்ஸைப் பார்க்க வேண்டுமானால் கூட ஏழு கி. மீ. நடக்க வேண்டும். ஆரம்பப் பள்ளிக்குச் செல்வதானாலும் மூன்று கி. மீ. நடந்தால்தான் உண்டு. அனிக்கனேந்தல் மட்டுமல்லாமல் அதைச் சுற்றியுள்ள கருப்பக்குடி, காரக்குடி, உடையாகுளம், விரிசூர், தளக்காவூர் ஆகிய ஊர்களுக்கும் கமுதி வட்டத்திலுள்ள இராணி சேதுபுரத்திற்கும் கூட இதே கதிதான்!

கலெக்டர்: நிதி வசதிகளைக் கணக்கில் எடுத்துக் கொண்டு பஞ்சாயத்து அல்லது ஆர். ஏல். ஜி. பி. திட்டத்தின் மூலம் அவற்றுக்குச் சாலை வசதி செய்ய முயல்கிறோம்.

கல்கி: கடலாடி அருகிலுள்ள மேலச் செல்வனூரில் ஒரு நடுநிலைப்பள்ளி. அது யூனியன் இரண்டு பங்கும், பொது மக்கள் ஒரு பங்குமாகச் சேர்ந்து ஆரம்பிக்கப்பட்ட பள்ளி. நிர்வாகத்திலுள்ளவர்களுக்கிடையில் இரண்டு கோஷ்டி இருப்பதால் குழந்தைகளின் படிப்பும் பாழாகிறது. பள்ளிக் கூடமும் கவனிக்கப்படாமல் இடிந்து விழும் நிலையில் இருக்கிறது.

கலெக்டர் (மாவட்ட முதன்மைக் கல்வி அலுவலக மேற்பார்வையாளர் பி. தேவராஜைப் பார்க்க, அவர் சொல்கிறார்): இதுவரை அது எங்கள் கவனத்திற்கு வரவில்லை. இருதரப்பினரையும் அழைத்துச் சமாதானம் செய்ய நடவடிக்கை எடுக்கிறோம்.

கல்கி: அதே ஊரில் அறுபத்தைந்தடி ஆழத்திற்குப் போடப்பட்ட குழாய்க் கிணறும் இந்தக் கோஷ்டித் தகராறு காரணமாக மூடப்பட்டுக் கிடக்கிறது. இத்தனைக்கும் அதில் தண்ணீர் வசதி இருக்கிறது என்கிறார்கள்.

கலெக்டர்: மக்களே இப்படிக் கோஷ்டிகளாகச் செயல்பட்டால் எப்படி நாம் திட்டங்களைச் செயல்படுத்த முடியும்? ஆவன செய்யப் பார்க்கிறேன்.

கல்கி: பேரையூர் அருகில் சுமார் இரண்டு கி. மீ. தூரத்தில் கிருதமால் நதி, குண்டாறு, பரலியாறு ஆகிய மூன்று நதிகளும் சந்திக்கின்றன. அப்படிச் சந்திக்கும் இடத்தில் மழைக்காலங்களில் ஏற்படும் வெள்ளம் பக்கவாட்டில் ஓடிவந்து, முதுகுளத்தூர் — அருப்புக்கோட்டை சாலையைக் கடந்து ஓடி வந்து வீணாகப் போகிறது. அதைத் தடுத்துக் கீழவலசை என்னும் இடத்தில் ஓர் அணை கட்டினால் சுமார் ஆயிரத்து ஐந்நூறு ஏக்கர் நன்செய் நிலமும் மூவாயிரம் ஏக்கர் புன்செய் நிலமும் பயனடையும் என்கிறார்கள். அதோடு சாலையைக் கடக்கும் இடத்தில் ஒரு பாலம் இல்லாதது மிகுந்த ஆபத்தாக இருக்கிறது என்கிறார்கள்.

கலெக்டர் (குறித்துக் கொள்கிறார்): ஆவன செய்கிறேன்.

கல்கி: புதுமடம் என்னும் கடலோரக் கிராமத்தில் இருக்கும் ஆரம்பப் பள்ளியில் சுமார் அறுநூற்றைம்பது குழந்தைகள் கட்டட வசதியின்றி அபாய நிலையிலுள்ள பாழடைந்த மண்டபத்தில்தான் படிக்கிறார்கள்...

கலெக்டர்: நிதி வசதி இல்லாமல் என்ன செய்ய முடியும்?

கல்கி: புதுமடத்திலுள்ள அரசு மருத்துவமனையில் லேப் வசதி இல்லாதது ஆச்சரியமாக இருக்கிறது. அங்குள்ள டாக்டரைச் சந்தித்த போது, 'மருத்துவமனைக்கு வரும் சாலை (ஊர் முழுவதும் அப்படித்தான்!) மணலாகவே இருப்பதால் ஜீப் கூட வர இயலாத நிலை! முதலில் சாலை வசதி முக்கியம்' என்றார். நோயாளிகள் இந்நிலையில் என்ன செய்வார்கள்?

மாவட்ட மருத்துவ அலுவலர் ஆர். என். சடையப்பன்: கவனிக்கிறேன்.

கல்கி: புதுமடத்திலுள்ள மக்கள் குளிக்கும் ஊருணியைச் சுற்றி அ. இ. அ. தி. மு. க.வைச் சேர்ந்ததாகச் சொல்லப்படும் சிலர் ஆக்கிரமிப்புச் செய்து கொண்டிருப்பதால், மக்கள் — குறிப்பாகப் பெண்கள் அங்கு சென்று குளிக்க முடியாத நிலை....

கலெக்டர்: ஆவன செய்யச் சொல்கிறேன்.

கல்கி: இதேபோல் இராமேஸ்வரம்,

மண்டபம் ரெவின்யூ கிராமங்களிலுள்ள அரசு புறம்போக்கு நிலத்தை வேலுச்சாமித் தேவர் என்பவர் தமது சொந்த நிலம் என்று சொல்லி நாற்பத்து நான்கு பேருக்கு விற்றுள்ளார்....

கலெக்டர்: அவர் மேல் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன.

கல்கி: அதெப்படித் தமக்குச் சொந்தமில்லாத ஓரிடத்தை ஒருவர் மற்றவருக்கு விற்கும் போது, அதை ரிஜிஸ்தர் ஆபீஸில் ரிஜிஸ்தர் செய்கிறார்கள்?

கலெக்டர்: சில சமயங்களில் இப்படிப் பட்ட தவறுகள் நடந்து விடுவது உண்மை தான்.

கல்கி: சாக்கடைகளுக்காகக் கமுதி வீதிகளில் கட்டப்பட்ட வாய்க்கால்கள், சரிவரக் கட்டப்படாததால், அவை உடைந்து சாக்கடைகள் தேங்கி, மலேரியா போன்ற நோய்களைப் பரப்புவதாகச் சொல்கிறார்கள்...

கலெக்டர்: சம்பந்தப்பட்டவர்களை நேரில் சென்று பார்த்து ஆவன செய்யச் சொல்கிறேன்.

கல்கி: கீழக்கரைக்கும் பனையங்கால் என்னும் ஊருக்கும் இடைப்பட்ட சாலையில் சுமார் நான்கு கி. மீ. தூரம் வெறும் மணல் பகுதியாகவே இருப்பதால் ஜீப் தவிர வேறு வாகனங்கள் செல்ல முடியாத நிலை...

கலெக்டர்: மறுபடியும் நான் நிதிப் பற்றாக் குறையைத்தான் சுட்டிக் காட்ட வேண்டியிருக்கிறது.

கல்கி: கடலாடி யூனியனில் உள்ள அவத்தாண்டை, குருவாடி, கொக்காடி போன்ற ஊர்களிலிருந்து எழுபத்து மூன்று பேர் கையெழுத்திட்டு எங்களுக்குக் கடிதம் எழுதியிருக்கிறார்கள். எதற்கு? குடிநீருக்காகத் தான். வெறும் குடிநீருக்காக இத்தனை பேர் கையெழுத்திட்டு வேறு எந்த மாவட்டத்திலிருந்தும் எங்களுக்குக் கடிதம் வந்ததில்லை!

கலெக்டர்: கடலாடி, முதுகுளத்தூர் பகுதிகள் இந்த ஆண்டு மிகவும் பாதிக்கப்பட்டிருப்பது உண்மைதான். நான் முன்பு சொன்ன நிரந்தரத் தீர்வுகளைக் கண்டாலொழிய வேறு வழியில்லை.

கல்கி: இராமநாதபுரத்திலுள்ள ஸ்வார்ட்ஸ் மேல்நிலைப்பள்ளிக்கருகிலேயே கழிவு நீர் தேங்கிக் கிடப்பதால், சுகாதாரக் குறைவு ஏற்படுவதாகச் சொல்கிறார்கள்...

கலெக்டர்: பல லட்சம் ரூபாயில் அதைச் சுற்றி ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ் கட்டும் திட்டம் ஒன்று இருக்கிறது. அது செயல்படுத்தப்படும்போது, அதனால் ஏற்படும் சுகாதாரக் குறைவும் தடுக்கப்பட்டு விடும்.

கல்கி: இராமநாதபுரத்திலுள்ள நூலகத்தில் புத்தகங்களை அடுக்கி வைப்பதற்கான ஷெல்புகள் கூட இல்லை. அதனால் புத்தகங்களைக் கட்டுக்களாகத்தான் கட்டி வைத்திருக்

கிறார்கள்...

கலெக்டர்: தக்க நடவடிக்கைகளை மேற்கொள்ளச் சொல்கிறேன்.

கல்கி: இராமநாதபுரத்தில் இயங்க வேண்டிய அரசு அலுவலகங்களில் பல இன்னும் மதுரையில்தான் இயங்குகின்றனவாமே?

கலெக்டர்: உண்மைதான். அரசு அலுவலகங்களுக்கான கட்டடங்கள் இப்போது தான் கட்டப்பட்டுக் கொண்டிருக்கின்றன. அப்பணி வரும் 88 ஆம் ஆண்டு முடிவடையும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. அப்போதுதான் பிரச்னை தீரும்.

கல்கி: இராமநாதபுரம் நகரின் குடிநீர்த் தேவைக்கு என்ன திட்டம் இருக்கிறது?

கலெக்டர்: இப்போதைய பற்றாக்குறையை லாரிகளின் துணை கொண்டு சமாளித்து வருகிறது நகராட்சி. அருகிலுள்ள இருமேனி, பொட்டிதட்டி கிராமங்களிலிருந்து நகருக்குக் குடிநீர் கொண்டு வருவதற்காக எண்பத்து நான்கு லட்சம் செலவில் ஒரு திட்டம் போடப்பட்டுள்ளது. அது நிறைவேறினால் பிரச்னை இருக்காது.

கல்கி: இராமநாதபுரத்திலுள்ள அரசு கலைக்கல்லூரி மாணவர்களுக்கிடையில் ஜாதிச் சண்டை ஒரு பெரிய பிரச்னையாக இருப்பதால் கல்லூரி இயங்கும் நாட்களே மிகவும் குறைவு என்கிறார்களே?

கலெக்டர்: உண்மைதான். என்ன செய்வது? இன்றைய இளைய சமுதாயத்தினருக்குப் பல்வேறு திட்டங்களின் மூலமும் செயல்களின் மூலமும் எதிர்கால நம்பிக்கையை உறுதிப்படுத்தாத வரையில் இதுபோன்ற விரும்பத்தகாத நிகழ்ச்சிகளை நாம் அத்தனை சுலபத்தில் தடுத்து நிறுத்திவிட முடியாது.

கல்கி: சிறு விவசாயிகளுக்கு மான்யமாகக் கொடுக்கப்படும் விதை வித்துக்கள் சரியான நேரத்திற்குக் கொடுக்கப்படுவதில்லையாமே? உதாரணத்திற்கு இந்த ஆண்டு நிலக்கடலை வித்துக்கள் சரியான பருவத்தில் கொடுக்கப்படவில்லையாமே?

கலெக்டர்: இந்த ஆண்டு தாமதமாகக் கொடுக்கப்பட்டது உண்மைதான். இனி சரியான நேரத்திற்குக் கொடுக்கச் சம்பந்தப்பட்ட அலுவலர்கள் ஆவன செய்வார்கள் என்று நம்புகிறேன்.

கல்கி: சிறப்பு வாய்ந்த திருஉத்திரகோசமங்கை, திருப்புல்லாணி, நயினார் கோயில், திருவாடானை, ஏர்வாடி தர்கா என்று பல புண்ணியத் தலங்கள் இருந்தும், சுற்றுலா வளர்ச்சித் துறை இராமேஸ்வரத்தைத் தவிர மற்றவற்றை விளம்பரப்படுத்தாதது ஏன்?

கலெக்டர்: அதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன.

கல்கி: சிவகங்கையில் இயங்கும் மருது பாண்டியர் போக்குவரத்துக் கழகத்தை இரண்டாகப் பிரித்து, புதியதை இராமநாதபுரம் மாவட்டத்தில் வைக்க வேண்டும் என்கிறார்கள்....

கலெக்டர்: அதற்கான தீர்மானம் மாவட்ட வளர்ச்சி மன்றக் கூட்டத்தில் நிறைவேற்றப் பட்டுள்ளது.

கல்கி: மண்டபம் யூனியனில் மல்லிகைத் தோட்டமும் ஆராய்ச்சி மையமும் அமைக்கலாம் என்கிறார்களே?

கலெக்டர்: உண்மைதான். அதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன.

கல்கி: பாம்பன் பாலம் எப்போது கட்டி முடிக்கப்படும்?

கலெக்டர்: அடுத்த ஆண்டுக்குள் முடிவடைந்துவிடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

கல்கி: சேது சமுத்திரத் திட்டம் என்னவானது?

கலெக்டர்: இக்கேள்விக்கு அரசுதான் பதில் சொல்ல இயலும்.

கல்கி: நீங்கள் கலெக்டராகப் பொறுப்பேற்று ஒன்பது மாதங்களே முடிந்த நிலையில் உங்களை மாற்றல் செய்திருக்கிறார்கள். இந்நிலையில், நீங்கள் இந்த மாவட்டத்துக்காகச் செய்ய வேண்டிய பணிகளைச் செய்ய முடியாமல் போகிறதே என்ற வருத்தம் உங்களுக்கு இருக்கிறதா?

கலெக்டர்: இந்த மாவட்டத்திற்கு இன்னும் ஏராளமாகச் செய்ய வேண்டியிருப்பது உண்மை. ஆயினும் எனது பணி மாற்றலுக்கு உட்பட்ட பணி. இந்நிலையில் நான் அதை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். அதைப் பற்றி நான் விமர்சனம் செய்யக் கூடாது.

கல்கி (மற்ற ஆபீஸர்களைப் பார்த்து): நாங்கள் சுற்றுப்பயணம் செய்த வரையில் (கலெக்டரைச் சுட்டிக்காட்டி) இந்தக் கலெக்டரைப் பற்றி மக்கள் நல்ல அபிப்பிராயமே சொல்கிறார்கள். அடிக்கடி கலெக்டர்களை மாற்றும் அரசின் போக்கிலும் அதிருப்தி அடைந்திருக்கிறார்கள். காரணம், இந்த மாற்றங்களால் வளர்ச்சிப் பணிகள் பாதிக்கும் என்பதுதான். நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

ஆபீஸர்கள் (ஒட்டுமொத்தமாக): மக்களின் அபிப்பிராயம் உண்மையானதுதான்.

— ஆபீஸர்கள் அனைவரும் இப்படிச் சொன்ன போது, அவர்களின் அன்பில் உணர்ச்சிவசப்பட்டுப் போன கலெக்டர் திபேந்திரநாத் சாரங்கி பேச முடியாமல் தடுமாறிப்போனார். அதனால், கடைசியில் கலெக்டரின் தனி உதவியாளர் (பஞ்சாயத்து வளர்ச்சி) நடேசன்தான் வந்திருந்த ஆபீஸர்களுக்கும் நமக்கும் நன்றி கூறிப் பேச வேண்டியதாகிவிட்டது. இறுதியில் விடைபெறும் போது, நாம் உள்பட அனைவரும் ஏதோ வேறோர் துக்க காரியத்திற்குச் சென்றுவிட்டுத் திரும்பும் உணர்ச்சியில்தான் பிரிய வேண்டி வந்துவிட்டது!





# தண்ணீர் விடும் கண்ணீர்க் கதை!

காற்றுக்கு அடுத்தபடியாக உயிர வாழ மனிதனுக்கு அத்தியாவசிய மானது நீர்!

நம் முன்னோர்கள், நீரின் பெரு மையை அறிந்து அதை தெய்வ மாகவே வழிபட்டார்கள்!

ஆனால் இன்று? நாகரீகம் வளர வளர தண்ணீர் பாழ்படுத்தப்படு கிறது. தொழிற்சாலைகள், அலுவல கங்கள், மருத்துவமனைகள், வீடுகள் போன்றவையிலிருந்து வெளியேற்றப் படும் கழிவு நீர்-அசுத்த நீர், ஆறுகள், குளங்கள் கால்வாய்களில் மட்டுமின்றி கடலிலும் கலககிறது. விளைவு? தூய்மையான நீர் நிலைகள் அசுத்தத்தின் விளை நிலமாகின்றன. பல வியாதிகளின் உற்பத்திக கூடங்களாக மாறு கின்றன.

இது மட்டுமா? காடுகளை மரங்களை அழித்தோம், நிலத்தடி நீரை அள வுக்கு மீறிப் பயன் படுத்தினோம். பலன்-மழையளவு குறையலாயிற்று! தண்ணீர்ப் பஞ்சம் பெருகலாயிற்று!

நீர் இல்லையேல்—மரங்கள் இல்லை
மரங்கள் இல்லையேல்—மழையில்லை
சோலை இல்லையேல்-எங்கும்
பாலைதான்!

**சிந்தியுங்கள்!**

நமது வருங்கால சந்ததியினராவது இந்த நிலையை தவிர்த்து நல்வாழ்வு வாழ வேண்டாமா?

**சிந்திப்பீர்! செயல்படுவீர்!**

மரங்களை வளர்ப்பீர்!

மண்வளத்தை பாதுகாப்பீர்!

நீரை மாசுபடுத்தாதீர்!

சுற்றுப்புறத் தூய்மையைப்பாது காப்பீர்!

இதுவே நமது குறிக்கோளாக அமையட்டும்.

> தொழிற்சாலையிலிருந்து மாசு உண்டாக்கும் கழிவு நீரையும் நச்சுப் புகையை யும் பொது இடங்களில் கலக்கவிடுவது சட்டப்படி குற்றமாகும்






வெளியிடுவோர்:
சுற்றுப்புறத் தூய்மைக் கட்டுப்பாடுத் துறை
சென்னை 600 009

DIPR/836/MS/87
ADWAVE/DEPC/3160

வட்டமேஜை

# கவிஞர்களே, கை கொடுங்கள்!

* கல்வியின் தரம் உயர, 'கல்விக்கென்றே ஓர் ஐந்தாண்டுத் திட்டத்தை வகுக்கச் சொல்லி, தாங்கள் தலையங்கத்தில் பிரதமருக்குக் கூறியுள்ளது வரவேற்கத் தக்கது.

இராமேஸ்வரம், அ. அருள்.

* இ. காங்கிரஸ் ஆட்சியின் (அரசின்) விரிசல் கண்ட வீட்டையும், எதிர்க் கட்சிகளால் உருவாக்கப் படும் புதிய குடியிருப்பையும் நம்ப முடியாமல், மக்கள் எல்லாக் காலமுமே நடுத் தெருவில் நிற்க வேண்டியதுதான் என்பதைக் கார்ட்டூன் தத்ரூபமாக படம் பிடித்துக் காட்டியது.

பட்டுக்கோட்டை—2, சண்முக. இராதா.

* கல்கியில் பிரசுரமான கோவி. மணி சேகரனின் 'வேங்கை வனம்' கதைக்கு ராஜ ராஜன் பரிசு ரூபாய் ஒரு லட்சம் கிடைத்துள்ளது குறித்துப் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

எழுத்தாளர்களுக்கு மட்டுமே மத்திய மாநில அரசுகளால் பரிசுகள் வழங்கப்பட்டு வருகிறது. அவர்களின் படைப்புக்களுக்கு உயிரூட்டிச் சித்திரங்கள் வரையும் ஓவியர்களுக்கு எந்தப் பரிசும் இதுவரை தரப்பட வில்லை. ஓவியக்கலை ஒன்றையே ஜீவனோபாய மாகக் கொண்டுள்ள என் போன்ற ஓவியர்களின் இக்குறையைத் தீர்க்கக் கோரி முதல்வருக்குக் கடிதம் எழுதியுள்ளேன்.

சென்னை—34, விஜு.

* தினமலர் ராமசுப்பையர் நினைவு' விருது, ஒவ்வொரு கல்கி வாசகருக்கும் வழங்கப்பட்ட விருதே எனக் கண்டதும் உளம் மகிழ்ந்தோம்!

பள்ளிபாளையம், கே. இரமேஷ்.

* காவஸ்கர் பத்தாயிரம் ரன்கள் எடுத்துச் சாதனை புரிந்தாரென்றால், நீங்கள் அழகான அட்டையும், அருமையான பேட்டியும், சுவையான குவிஸ்ஸாம் தந்து சாதனை படைத்துவிட்டீர்கள்.

மதுரை—20, எஸ். ஜே. இதயா.

* காவஸ்கர் க்விஸ்ஸில் இதையும் சேர்த்துக் கொள்ளுங்கள்:

கேள்வி: காவஸ்கரின் சுயசரிதத்தையே க்விஸ் என்ற பெயரில் சுருக்கமாய்த் தந்த பத்திரிகை எது?

பதில்: கல்கி.

கோவை, உமார்த்தி

* 22.3.87 இதழில் குமரி அனந்தன் பற்றிய பதிலில், உதிரிகள் இணைந்து செயல்படுவதால் ஏற்படக் கூடிய நன்மை பற்றித் தராசு குறிப்பிட்டிருப்பதை வரவேற்றாலும், 'குமரி அனந்தன் தனியாக இருந்து எதையுமே சாதிக்க இயலாது' என்ற முதல் வரியை ஆட்சேபிக்கிறேன். நாடாளுமன்றத்தில் தமிழ் உள்ளிட்ட அனைத்து மாநில மொழிகளிலும் வினா எழுப்பும் உரிமையைப் பெற்றுத் தந்தது முதல், சிறு விவசாயிகளுக்குத் தமிழக அரசு இலவச மின்சாரம் வழங்கும்படி செய்ததுவரை, அவரது பல சாதனைகளைப் பட்டியலிட முடியும்.

விழுப்புரம், எம். நடராஜன்

* பத்துப் புகைப்படங்களும்காமிராவினால் உருவான பலதரப்பட்ட கவிதைகள், நம் கவிஞர்கள் அவற்றுக்கேற்ப எழுதிய கவிதைகளோ மாறுபட அவலங்களை மனசில் தைக்கும் விதத்தில் சித்திரித்துவிட்டன!

திருத்துறைப்பூண்டி, ஜான்பிரிட்டோ.

* கவிதைகள் அனைத்தும் இன்றைய சமூக அரசியல் அவலங்களை எடுத்து விளக்குவதாய் அமைந்திருந்தன. ஒவ்வொர் இந்தியனின் நெஞ்சிலும் சுழலும் உணர்ச்சிகளுக்கு இக்கவிதைகள் ஓர் எடுத்துக்காட்டு.

கச்சனம், பி. துரையன்

* **நாட்டு நடைமுறையை அந்தப் பத்துக் கவிதைகளும்** சுத்தமாக அலசி எடுத்துவிட்டன. போட்டோக்களும் கவிதைகளும் சரியான போட்டா போட்டி. சபாஷ் கவிஞர்களே! கை கொடுங்கள்!

வடுவூர், எஸ். கண்ணன்.

* 'சீத்தா செப்பின கதா' அரவமுலோ, எந்த கொப்பகா டிரான்ஸ்லேஷன் சேஸாரண்டி, எஸ்.வி. எஸ். காரு. பலே!

சென்னை—39, திருமதி நாராயண ராவ்.

* கல்கி 22.2.8. இதழில் என்னைப் பேட்டி கண்டபோது, திருநெல்வேலி சுற்றுப்புறச் சூழல் தூய்மைக் கட்டுப்பாட்டுத் துறை பற்றிய கேள்விக்குப் பதிலளிக்கையில், ''மதுரா கோட்ஸ் நிறுவனம் பதினொரு லட்சம் செலவில் ஒரு புதிய பிளாண்ட் நிர்மாணிக்க இருப்பதே அதன் நடவடிக்கையால் தான்'' என்று குறிப்பிட்டிருந்தேன். தற்போது மதுரா கோட்ஸ் நிறுவனம் எழுதியுள்ள ஒரு கடிதத்தின்படி அந்நிறுவனம், 1984 இல் ரூ. 15.40 லட்சமும் 1986 இல் ரூ. 30 லட்சமும் செலவிட்டுப் புதிய பிளாண்ட் நிறுவி, அது தற்போது செயல்பட்டு வருவதாக அறிகிறேன்.

திருநெல்வேலி, பி. ஆர். பிந்துமாதவன்
மாவட்ட ஆட்சித் தலைவர்.

# எங்க ஊரு பாட்டுக்காரன்

கரடு முரடு விஜயசக்ரவர்த்திக்குள் தான் எப்படிப்பட்ட பாச ஊற்று! "அவ்வளவு பெரிய மனுஷனாயிட்டியாடா நீ?" என்று கண் கலங்கி, கடிந்து எண்ணெயைத் தேய்த்து விடுகிற காட்சியாகட்டும், ஓட ஓட விரட்டி, பித்தம் இறங்குவதற்காகக் கொடுக்கும் இஞ்சிக் கஷாயக் காட்சியாகட்டும் — மனிதர் புது பரிமாணத்தைக் காட்டியிருக்கிறார்.

அந்தச் செண்பகம் லேசான துடுக்கு, நிறைய அடக்கம் ஆகியவற்றை உள்ளடக்கிய பளபளப்பான பாத்திரம். அப்பா செந்தாமரை சிரித்துக் கொண்டே மறுத்தவுடன் அறைக்குள் நுழைந்து கறுப்பு வளையலைப் பார்க்கும் போதே பகீரென்றது நமக்கு. அதேபோல் ஆகிவிடுகிறது. புதுமுகமாமே! நிஷாந்தி என்கிற பெயர்தான் லேசாகத் தடுமாறுகிறது. மற்றபடி நல்ல ஸெலக்ஷன்.

கொஞ்சம் அப்பாவித்தனம். இன்னும் கொஞ்சம் அப்பாவித்தனம், அப்படி இப்படி மிரட்டினால் இன்னும் கொஞ்சம் ஸீரியஸ் அப்பாவித்தனம் என்ற முகத்துடன் ஹீரோ ராமராஜன். இந்தப் படத்தில் அதற்கு மேல் முகபாவம் தேவையில்லை. அதை நன்றாக உணர்ந்திருக்கிறார் இந்த நளினி மணாளன். எந்தக் கிராமத்தில் பார்த்தாலும் இப்படி ஒரு 'சித்தா' கிடைப்பார். ஹீரோ ஆகாயத்திலிருந்து குதித்தவரைப் போலில்லாமல் நம்முடன் இருப்பவர்களில் ஒருவராகத் தெரிவது படத்திற்கு ஒரு ப்ளஸ் பாயின்ட்.

நம்பியார் மீசையை முறுக்கிக் கொண்டு சதையும், கொம்புமாய் இருக்கும் 'பேச்சி'யைக் கொண்டு வந்து களத்தில் விட, ராமராஜன் முண்டாசு கட்டிக் கொண்டு களத்தில் இறங்க, வீராவேசமான ஜல்லிக்கட்டு ரவுண்டைப் பார்க்கப் போகிறோம் என்று நினைத்தால், 'நம்ம ஊர்ப்பாட்டுக் காரன் பாட ஆரம்பித்து விடுகிறார்! லேசான இன்ப அதிர்ச்சிதான். அதைத் தொடர்ந்து வருகிற சிலம்பச்சண்டை இன்னொரு இன்ப அதிர்ச்சி.

ராமராஜன் கூடவே வரும் தெற்றுப்பல் வாண்டு, வீட்டில் 'அது' தனியாக இருப்பதாகச் சொல்ல, அதனால் காதலியைக் காண மாடு மேய்ப்பதைக் காற்றில் பறக்கவிட்டு விட்டு ராமராஜன் ஓடிவந்து குட்டிச்சுவர் பின்னாலிருந்து எட்டிப் பார்க்க, இன்னொரு மொட்டையும் இந்த இருவருடன் வந்து சேர்ந்து கொள்ள, பழுத்த கிழவி எச்சில் இலையோடு வெளிப்படுவது நயமான நகை.

ரேகா எங்கே, ரேகா எங்கே என்று மனசு இடந்து அடித்துக் கொள்ளும் நேரத்தில் (இடைவேளைக்கு அப்பால்) வந்து சேர்கிறார். ஒரு சிரிப்பு, ஒரு துளி கண்ணீர், ஒரு காதல் பார்வை என்று அசத்தி விடுகிறார்.

ஜெய்சங்கர் சண்டையிடும் ஃப்ளாஷ் பேக், படத்திற்குத் தேவையா என்ன?

சங்கிலி முருகன், திலீப் கோஷ்டியின் அட்டகாசம், வெகு ஒழுங்காக அன்ன நடை பயின்ற கதையை கழுதை நடை பயிலும் கதையாக மாற்றிவிடவில்லை? (அதுசரி... அப்படி ஒரு முறை மாமன், சொத்து விவகாரம், அடிதடி இதெல்லாம் இல்லாவிட்டால் கதையை எப்படித்தான் முடிப்பதாம்?)

வடநாட்டு சேட்டு சந்திரன் வணங்கும் கிருஷ்ணன். அவருடைய தென்னாட்டு பாலிவி வணங்கும் மதுரை வீரன் (சாராயம், கறி சோறு) — நல்ல கலகல.

செந்தில் சரியான ராசிக்காரர். முதல் முதலாளி மிஷினில் மாட்டுகிறார். இரண்டாவது முதலாளி போண்டியாகிறார். மூன்றாவது முதலாளி மாங்காயை வாயில் வைத்தபடியே மண்டையைப் போடுகிறார். அப்புறம் அவர் மூவாயிரம் கொடுத்து நோஞ்சான் மாடு வாங்க, அதன் கண்ணில் மஹாவிஷ்ணு தெரிய, தரிசுக்காட்டில் புதையல் கிடைக்க — கதையுடன் ஒட்டாத காமெடி என்றாலும் கலகலப்பாகச் சிரிக்க முடிகிறது.

காமிரா கண்ணுக்கு இதம். பாடல்கள் செவிக்கு நலம் (செண்பகமே — அட்டகாசம்). டைரக்ஷன் மனத்துக்குச் சுகம்.

— ஜெயமன்மதன்



# ஆணாய்ப்பிறந்தவன்



"எல்லாரும் வந்தாச்சா? க்ளாஸை ஆரம்பிக்கலாமா?"

"ஆரம்பிக்கலாம் சார்! புதுசா ஒரு கதை சொல்லுங்க சார்!"

"மேடைல ராஜா வேஷம் கட்டற ஒருத்தன். மேடைலேர்ந்து எறங்கினப்புறமும் தன்னை ராஜான்னே நெனைச்சிட்டிருப்பான். ஆராய்ச்சி மணி அடிக்க யாராவது நியாயம் கேட்டா, அவனே அந்தக் கேஸில் இறங்கி நீதியை நிலைநாட்டுவான்... இந்த மகாராஜா தான் சத்யராஜ்!"

"எப்படி சார், நியாயத்துக்காகப் போராடுவாரு?"

"ராஜா வேஷம் கட்டறவனுச்சே, கையில் எப்பவும் பளபளன்னு உடைவாள் வச்சிருப்பான். பொண்ணுங்ககிட்ட வாலாட்டறவங்க, அரிசில கல்லுக் கலக்கறவங்க, யார் தப்புப் பண்ணினாலும் விஷுக்னு ஒரே சீவு — ஆளையே க்ளோஸ் பண்ணிடுவான்!"

"ஐயையோ, அவன் கொல்றச்சே யாராவது பார்த்திட்டா?"

"வெண்டா அவன் குறுக்கே கேள்வி கேக்கறது! மகாராஜாகிட்ட சொல்லி உன்னையும் ஒரு சீவு சீவிடச் சொல்லிடுவேன்! எல்லாரும் கொலையைப் பாத்தாக் கூடப் போலீஸ்ல சொல்ல மாட்டாங்க, தெரியுமில்ல. ஏன்னெல்லாம் கேக்காதீங்க. அது அப்படித்தான்! தன்னோட அம்மாவைக் கற்பழிச்சுக் கொன்னவங்களைக் கண்டுபிடிச்சுத் தண்டனை கொடுக்கச் சொல்லி ஒரு சின்னப் பையன் வ ரா னி ல் ல? அவன் இப்ப டி. எஸ். பி. யி ட் ட த் தா ன் வளர்றான். டி. எஸ். பி. யாரு? அம்பிகா! போலீஸ் டிரெஸ் போட்டுப் பாவ்லாவா நாலு மிரட்டு மிரட்டிட்டு அப்புறம் அம்பேல் ஆயிடுவாங்க!"

"அம்பேல்னு?"

"சத்யராஜ் கூட டான்ஸ் ஆடணுமில்ல, மழைல நனைஞ்சுக்கிட்டு? படத்தில் சில்க்கு இருந்தாக் கூட, போட்டில அம்பிகாவுக்குத்தான் 'மகா கவர்ச்சிஸ்ரீ' பட்டம் கொடுக்கணும்... ஐயோ, என்னென்ன டிரெஸ்லாம் போடறாங்க!"

"சத்யராஜைப் போலீஸ்ல பிடிக்கவே மாட்டாங்களா சார்?"

"பிடிச்சாக் கூட ஜீப்லேர்ந்து தப்பிக்க அவருக்குத் தெரியாதாடா? மண்டு! அப்புறம் டிபார்ட்மெண்ட்ல கொலைகாரனைப் பிடிக்கணும், பிடிக்கணும்னு பேசுவாங்களே தவிர, ஒருத்தராவது புத்திசாலித்தனமா ஒரு காரியம் கூடப் பண்ண மாட்டாங்க. பண்றதுக்கு டைரக்டர் விட்டுருவாரா?"

"அப்புறம்?"

"டமால் டமால்னு தலையைச் சீவற ஆளுன்னு புரிஞ்சதும் மகாராஜான்னு சொன்னாலே ஊரே நடுங்குது! பணக்காரங்க ஏழைங்களுக்குத் தேடித் தேடி வேலை தருவாங்க; வீடு கட்டித் தருவாங்க. அப்புறம் ஒரு கொள்ளைக்காரனைக் கூப்பிட்டுப் போலி மகாராஜாவா ஆக்ட் பண்ணுப்பான்னு செட் அப் பண்ணி, நம்மாளு ஒரிஜினல் மகாராஜா பேரை ரிப்பேர் பண்ணிடுவாங்க..."

"வேற கதைக்குப் போவிட்டீங்களே சார்?"

"ஷ்! ஏறு பெஞ்ச் மேல. குறுக்கே கேள்வி கேக்காம நானே பாத்திட்டு வந்திருக்கேன், உனக்கென்ன அதிகப் பிரசங்கித்தனம்!"

"நீங்க சொல்லுங்க, சார்!"

"என்னத்தைச் சொல்றது? க்ளைமாக்ஸ்ல நம்ம ஒரிஜினல், டிராமா டிரெஸ்ஸைப் போட்டுக்கிட்டுப் போய், டூப்ளிகேட் போட சண்டை போட்டு, பத்து ரவுண்டு குண்டு உடம்பில பாய்ஞ்சப்புறம் கூட, வாளை வச்சு டூப்ளிகேட்டை க்ளோஸ் பண்ணிட்டு மகாதியாகி ஆயிடுவாரு! அவருக்குக் கல்யாணமாகாமலே ரெண்டுவிதவைங்கன்னு சொல்லி அம்பிகாவும், சில்க்கும் பொட்டை அழிச்சுப்பாங்க! இவ்வளவு சொன்னேனே... இந்தப் படத்திலேர்ந்து உங்களுக்கெல்லாம் என்ன தெரிஞ்சுது?"

(எல்லோரும் கோரஸாக) "ஊர்ல வெயில் எக்கச்சக்கமா ஆயிருச்சின்னு சார்!"

— ஜெயமன்மதன்

பாரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் வி. முரளி. பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.

நிர்வாகக் காரியாலயம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை—600 032. போன்: 431543 434157.

ஆசிரியர் குழு அலுவலகம்: 28, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை—600 034. போன்: 473389.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ 78/—; வெளி நாடு கப்பல் தபால் ரூ 250/—; விமானத் தபால் ரூ 650/—. (ஆறு மாதச் சந்தா ஏற்கப்படும்.)




# அடுத்த முறை,
# ஸன்ஃப்ளவர்
# பாதுகாப்பு கவசம் மூலம் உங்கள் குடும்பத்தைக் காத்திடுங்கள்.



**ஸன்ஃப்ளவர் இகானமி பேக். நீங்கள் இழப்பதோ சில சில்லறை காசுகளும் சில்லறை வனஸ்பதியும். பெறுவதோ அதி தூய்மை.**

HTA 1033

உங்கள் குடும்பத்திற்கு, முற்றிலும் பாதுகாப்பானதையும், தூய்மையானதையும் கொடுங்கள்: ஸன்ஃப்ளவர் ப்ராண்ட் வனஸ்பதி. விட்டமின் A மற்றும் D செறிந்த, ஊட்டமிக்க, ஆரோக்கியமான வனஸ்பதி உங்களுக்குக் கிடைக்க, ஸன்ஃப்ளவர் பாதுகாப்பு கவசத்தால் ஸீல் செய்யப்பட்டு, பேக் செய்யப்பட்டு வருகிறது.








# ஸன்ஃப்ளவர்
ப்ராண்ட் வனஸ்பதி
இதை விடச் சிறந்தது தூய நெய் மட்டுமே.

கிலோ மற்றும் ½ கிலோ பேக்குகளில் கிடைக்கிறது.




*Closer to the consumer*

புதிய

# அறிமுகம் இதோ ஜூஸி ஃப்ளேவர் க்ரிஸ்டல்ஸ்

மேங்கோ | ஸ்ட்ராபெர்ரி | பைனாப்பிள் | ரோஸ்

லைம் | காலாகட்டா | லெமனேடு

## திறப்பீர், தெளிப்பீர், இக்காலத் தீஞ்சுவை பரப்பிக் களிப்பீர்.

இதுவரை செய்தறியாத இலகு முறை. எண்ணிக்கோ 1-2-3 ஆச்சு: 1 பேக்கெட் புதிய ஜூஸி ஃப்ளேவர் க்ரிஸ்டல்ஸ் படிகங்களை ஒரு கூஜாவிலோ, பாத்திரத்திலோ போட்டு, 2 கப் சர்க்கரையும், 3 கப் நீரும் சேர்த்துக் கரைத்தால், முழுசாக 1 புட்டி (பாட்டில்) கான்ஸென்ட்ரேட் கிடைத்திடும்.

இனிமையில் ஒன்றை ஒன்று மிஞ்சும் 8 விதமான பரவச நறுமணச் சுவைகள் உள்ளன.

ஒருக்காலும் சுவைத்திருக்க மாட்டீர்கள் இத்தகைய சுவையின்பம்—உங்களுக்கு, உங்கள் கண்மணிகளுக்கு.

SOFT DRINK CONCENTRATE

Ju•C

FLAVOUR CRYSTALS

ORANGE FLAVOUR

OBM/8663/TAM

KGF

இந்தியாவிலே தயாரிப்போர்: கே.ஜி.எஃப்

கூட்டுத்துணை: ஜெனரல் ஃபுட்ஸ் கார்ப்., யூ.எஸ்.ஏ.